எந்நாலுக்கும் இந்நூலே மூலம்

# உணர்வும் தவக்கனலும்

(இரண்டாவது அத்தியாயம்.)

ஞானவள்ளல்
பரஞ்சோதி மஹான்
அருளியது



பரிபூரண பரஞ்சோதியின்
உயர்ஞான சபையோரால்
வெளியிடப்பட்டது.

## க வ னி ப் பு

உற்சாக உண்மை ஊக்கத்தோடு உலகம் அறிவின் மேம்பாட்டிற்கு வரவேண்டுமென்று நினைப்போர் யாரோ அவர்களின் இருதயமே இச்சபை.

T. S. தேவராஜன்
காரியதரிசி.

# எந்நூலுக்கும் இந்நூலே மூலம்.

---

1-வது அத்தியாயம்:— ஆதியும் உலக இணைப்பும். உலக சிருஷ்டிக்குக் காரணமும் விதமும்—ஆதியின் தத்துவங்கள்-ஒரு அணுவில் சேர்ந்துள்ள தத்துவங்கள்—பல உருவங்களின் உற்பத்தி—சொர்க்க மோக்ஷ லோகம்—தேவர், நல்லடியார், சித்தர் இருப்பிடங்கள்—சூக்கும சரீரத்தின் இரகசியம், நன்மைகள்—மனிதசிருஷ்டி, மனிதனில் அறிவு சிருஷ்டியின் கால அளவு—வேதங்களின் சந்தேகங்கள் நீங்கி நிரவுதலான துணிவு.

2-வது அத்தியாயம்:—உணர்வும் நவக்கனலும். எல்லாம் ஒரு அணுவாலேயே உற்பத்தி—அணுக்களின் பாகுபாடுகள்—ஓரறிவு முதல் ஆரறிவு வரை சேர்ந்துள்ள தத்துவங்கள்—பக்தி, யோகம், ஞானம் பாகுபாடுகளால் லாப நஷ்டங்கள்—தன்னை அறிவதற்கு மார்க்கம்—அறிந்தோரின் தன்மை—அறிவாளி முதல் அரசன் வரை நிர்வாகம் இருக்கவேண்டிய விதம்—பெரும் அறிவாளிகளின் தக்க ஆராய்ச்சிக்குள்ள முடிவு—நீயார் நான்யார்—உணர்வால் இன்பமும் கனலால் ஐக்கியமும்.

3-வது அத்தியாயம்:—ஒரு மொழி. ஆதியில் நாதம் சிருஷ்டியான விதம்—அது எங்கும் நிரவிய தன்மை—தன்னுள் தசநாதம் என்ற 10 சப்தங்கள் கேட்கக் காரணம்—கேட்கும் முறை—அதுவால் சுகம்—அதன் முடிவு.

4-வது அத்தியாயம்:—பரஞ்சோதி. ஆதியில் ஜோதி உற்பத்தியான விதம்—வித்திலிருந்து மனிதன் வரை வளர்ந்துவந்த நீதி—ஜோதிப் பொருளும் உலக நிர்வாகமும்—குண்டலி சக்தி—அதன் முடிவு.

5 - வது அத்தியாயம் :—பேரறிவு.
அறிவினுடைய சிருஷ்டி—காரண சரீரத்தின் இரகசியம்—அறிவின்பெருக்கம்—அதன் முடிவு.

6 - வது அத்தியாயம்:—ஆருதாரமும் அமிர்தமும்.
பலவித யோகங்கள்—அதன் பலன்கள்—மேலுள்ள ஆருதாரங்கள்—அவைகளின் வெப்பும் அறிவின்பிரகாசமும்—இத்திரைகளின் அளவு—உருவங்களுக்கேற்ப அமைந்துள்ள விதம்—ஆறுவகை திட்சைகளின் இரகசியம்.

7 - வது அத்தியாயம் : ஞானக்கண்.
மனித உடம்பிலுள்ள 8 கண்கள் அவைகளின் வல்லமைகள்—நெருப்பாறு மயிர்ப்பாலம் அளவு—அறிந்து கொள்வதால் மரண பயம் நீங்குதல்.

8-வது அத்தியாயம் :—பூதலோகம். மனிதனின் குற்ற தீங்குகள்—அவன் இருக்கும்போதும் அவனுக்குப் பின்னும் மக்களைப் பாதித்தல்—அவன் இறந்தபின் இருக்கும் இடம்—உலகத்தில் வியாதிகள் உண்டாகக் காரணம்—மக்கள் நடத்தும் கிரிகைகளால்உள்ள தீமைகள்-காசத்தை அடி போடு போக்கும் முறை—குரு சிஷ்யர் தொடர்பு.

9-வது அத்தியாயம் :— நடந்ததெல்லாம் நன்மைக்கே.
பொறுமையால் ஏற்படும் நன்மைகள்—சுவாமிகளின் சுய அனுபவங்கள்—சரித்திரம்.

10-வது அத்தியாயம் :—சந்தோஷம்.

5-6

# எந்நூலுக்கும் இந்நூலே மூலம்

## (இரண்டாவது அத்தியாயம்)

---

## உணர்வும் தவக் கனலும்

சரீர அழகரும் பேரறிவின் புதல்வரும்
தர்க்கத்தை யெல்லாம் தகர்த்தெறிந்த தலைவரும்
தாரகத்தின் உள்ளுள்ள மௌன மோஹினியின்
கணவரும்
தன்னைத் தான் அறிந்த இறைவர்களே!
என் இருதய மலர்களே! மெய்யுணர்வாளர்களே!
என் அம்பலத்தில் இருந்து சொல்லுகின்றேன்
இறைவன்! இறைவன்! நான் இறைவனே!

2. உணர்வின் உணர்தலின் உணர்ச்சியே உலகம், உலகங்கள்.

உணர்வு

3. முதல் உணர்வு நினைவு; அதனுடைய முதல் ரூபம் ஒரு சிறு பெரும் அணு; இதன் அளவு.

⊙

அதுவே நான், நாம்.

4. இவ்வுணர்வு ஒன்றிருந்தும் அது ஓராற்றல் இல்லாதிருக்கும்போது ஒன்றுமில்லாதிருந்தது.

5. அன்பற்று இன்பற்று துன்பற்று
ஏகமுமற்று
என்னையும் யானற்றிருந்தேன்.

6. இவ்வொரு அணுவினுள்ளிருந்த ஏக பெரும் ஏக்கமே இதுவரை சிருஷ்டியாகியதும் இனி ஆகப் போவதும்.

7. இவ்வேக்கத்தின் முடிவைத் தன் அறிவின் அநுபவ வாயிலாக அறிந்தோரே முக்தர்.

8. இந்த அணுவில் உணர்வு உணர்தல் உணர்ச்சி மூன்றும் அடங்கிய ஒரு நிலையுள்ளதுவே நினைவு.

9. சுத்தமான பெரிய கண்ணாடி ஒன்றில் தன் உருவத்தைப் பார்த்தால் தன் யதார்த்த ரூபமே தெரிகின்றது. கண்ணாடியின் அளவுக்குத் தக்கபடி பெரிதாகவோ சிறிதாகவோ தெரிவதில்லை. அக் கண்ணாடியே சில் சில்லாய் உடைந்திட்டால் உடைந்த துண்டுகளில் எல்லாம் தன் ரூபத்தைக் காணலாம். உடைந்தபின் ஒரே ரூபம் அநேக ரூபங்களாகத் தெரிகின்றது. அதேபோல் தாமாயுள்ள ஆதி யதார்த்த ஏக்கம் ஒன்றே பலதாய் பலதே ஒன்றாய் உள்ளது.

10. சிறு அறிவிலிருந்து பெரும் பேரறிவு வரைக்கும் அததற்குத் தகுந்தவாறு ஆதியின் ஏக்கம் பிரிந்து நிறைவாய் இருந்து கொண்டிருக்கிறது.

11. சோப்பின் நுரை சிந்தியிருக்கும் போது எவ்வளவு குமிழிகள் தெரிகின்றனவோ அவ்வளவிலும் பார்ப்பவனுடைய ரூபம் தெரிகிறது. பார்பவனே ஒருவன்; பார்க்கப்படும் ரூபமோ அநேக நூறு. இவைகளில், கண்ணாடித் துண்டுகளில் யதார்த்த ரூபம் தெரிவதுபோலன்றி, குமிழிகளின் அளவுக்குத் தக்கவாறு ரூபம் பெரிதாகவும் சிறிதாகவும் குறையின்றி தெரிகிறது.

12. சிறு குமிழிகள் அழிந்து உண்டாகும் பெரும் குமிழியில் ரூபம் தெளிவாகத் தெரிவது போல் சிறு அறிவிலிருந்து மக்களைப் பேரறிவிற்குக் கொண்டு வருவதற்கே மகான்களுடைய சிரத்தை.

13. என் இருதய மலர்களே! குருவின் விசுவாசப் பற்றுதல் ஒன்றால் எல்லாம் அறியக்கூடிய ஆற்றல் நாளடைவில் பெருகப் பெருக தன் நினைப்பின் சக்தியே எல்லா ரூபங்களிலும் நிரம்பியிருக்கிறது தெரியவரும். விசுவாசம் அதிகரித்திருந்தால் அதனால் ஏற்படும் நன்மைகள் அநேகம். அப்படி ஏற்பட்ட நன்மைகளை "நடந்ததெல்லாம் நன்மைக்கே" என்ற நூலில் விளக்கிக் காட்டி யிருக்கின்றேன். விசுவாசத்தோடு இருப்போர்க்குத் தன் சரீர சம்பந்தமானதும் தொழில் சம்பந்தமானதுமான அசந்தர்ப்பங்கள் நீங்கி பெரும் நன்மையாகவே நடந்தேறுகின்றன. விசுவாசத்தின் பதிவு யதார்த்தஸ்தர்களிடத்தில் உண்மையாகவே பதிந்துவிட்டால் அந்த உருக்கத்தின் உண்மையின் தோற்றம் தன் எதிர் முகமாய் நடக்கும் காரியங்களெல்லாம் நன்மையாகவே நடக்கும்.

14. தூக்கத்தில் ஏற்படும் கனவுகளிலும் அணுவளவிலும் மாறாதபடி சரீரத்தோடு நடப்பதைக் காட்டிலும்

அநேக மடங்கு உண்மையாய் நடந்துகொள்ளவேண்டும். தன் விசுவாசத்தின் பற்றுதல் தனக்கே தெரிந்துகொள்வதென்றால் தன் கனவில் சரிவர நடந்துகொண்டாலே சரி. கனவில் சரியில்லாதிருந்தால் விழித்த அறிவு விசுவாசத்தை விட்டுவிடவேண்டுமென்பதல்ல. விழித்த அறிவு மோனச் சிந்தனையில் உருக்கமாய் உருகி உணர்ந்து அவ் விசுவாசக் குறைவை சரிப்படுத்திக்கொள்ளவேண்டும். இது உண்மையாளனின் செய்கை. மேலும் சொல்லுகின்றேன். விசுவாசம் கொள்ளுங்கள்! எல்லாவற்றிலும் ஜெயமே அடைவீர்கள்.

15. என் இருதய மலர்களே! கண்ணாடியில் கீரல் இருந்தால் பார்க்கும் ரூபத்தைப் பங்கப்படுத்தித் தெரிவிக்கின்றது. அறிவில் பேதமிருக்குமானால் தானும் பிறரும் பேதமாகவே தெரியவரும்.

16. கண்ணாடி பல நிறமுடையதாயிருந்தால் பார்க்கும் ரூபம் அந்நிறத்துக்காளாகுவதுபோல் தன்னறிவில் பேதமிருந்தால் எல்லோரையும் பேதப்படுத்தியே காட்டும்.

17. விசுவாசமுடையவர்களே! க்ஷணநேர உபதேசத்தில் நல்லதை விதைத்து நல்லதில் பதிந்து கொண்டீர்கள்.

18. விதைத்த வெள்ளாமை விளைந்து பழுத்து ரசிக்கும் வரை நிலத்தையுடையார்க்கு நிதானமும விசுவாச நீர் பாய்ச்சுதலும் வேண்டும். அதேபோல் குருவின் அன்பும் சீடர் விசுவாசமும்.

19. கண்ணாடியில் பதிந்த போட்டோ முதன் முதல் விகார ரூபத்துடன் தோன்றும். கழுவிக் கழுவிச் சுத்தம் செய்ததின் பின் யதார்த்த ரூபம் தெரிகின்றது. அதைப் போல் அமைந்தவர் குருவில் பதிந்த சீடர்.

20. உலக நல்லடியார்களே! படிப்பாலேயோ, புகழ்ச்சியாலேயோ பணத்தாலேயோ, தன்னைப் பெரிதாய் நினைப்போரின் பெருமை சிறிய பூதக்கண்ணாடியில் தன் ரூபத்தைப் பெரிதாகக் காண்பது போன்று.

21. பார்வை யழகுள்ள எலுமிச்சம்பழம் பெரியோர்களிடம் கூசாது செல்லும்; ஆனால் ஆகார பாத்திரத்தில் ஒதுங்கியே இருக்கும். அதைப் போல, புகழும் அழகுமுள்ளவர் அறிவாளிகளை நெருங்கி யிருந்தாலும் அறிவில் குற்றமுடையோராயிருந்தால் அவர்களிடமிருந்து ஒதுங்கியிருப்பவரே.

22. என் இருதய மலர்களே! சமயாசமயத்தில் பழம் ஒன்றைக் காண்பித்து அதில் நம் எல்லோருடைய ஏக்கம் முன்னமே இருந்ததால்தான் இப்பழத்தை இன்றைக்குப் பார்க்கிறோம் என்றும், இங்கு தோன்றக் கூடிய தோற்றங்களெல்லாம் அதில் பதிந்திருக்கின்றதென்றும், இவ்வாறான தொடர்பில்லாவிடில் அது இங்கு வந்திருக்காதென்றும், இச்சொல்லைக் கிரகிக்கவேண்டுமென்றது இப்பழத்திலும், இப்பழத்தின் வாயிலாக இச்சொல்லைக் கேட்கவேண்டுமென்றது உங்களிலும், சொல்லவேண்டுமென்றது என்னிலும் இவைகள் எல்லாம் ஒன்று சேர்ந்த ஏக்கமே இன்று முடிந்ததென்றும் அநேக முறை சொல்லியிருக்கின்றேன்.

23. ஒவ்வொரு தத்துவ முடிவான என் பிரசங்கங்களும் அங்கு வந்துள்ளவர்களுக்கு மட்டுமன்றி உலகத்தில் அவ்விஷயங்களுக்காக பாடுபட்டுக் கிரகித்துக் கொண்டு இருப்போர் எல்லோருக்கும் பிரசங்கத்தின் வேகம் மோதி அன்று சிறிது ஏதோ ஒரு நல்லாராச்சியும் கொடுத்து ஆனந்திக்க வைப்பதுடன் மற்ற பக்தர் யோகிகளுக்கும்

அவர்கள் கொண்டுள்ள துணிவுக்கும் மேலான ஒரு உற்சாகத்துணிவும் அறிவின் விழிப்பும் கொடுக்கின்றன.

24. அப்பிரசங்கங்களின் சொற்கள் அணுக்களில் பதிந்து அளவில்லா வேகத்தில் சென்று சுழன்று கொண்டிருக்கின்றன. இவ்வணுக்களில் ஒவ்வொரு அணுவைப் பிரித்துப் பார்த்தால் அப்பிரசங்கம் அநேக இடங்களில் நடந்து கொண்டும், அதை இங்கே கேட்பவர்கள் மற்ற இடங்களில் அதன் புகழ்ச்சியையும் அதற்குரிய விவரங்களையும் எடுத்துக்காட்டிப் பிரசங்கங்கள் செய்து கொண்டும், இங்கு பிரசங்கம் செய்வோர் அங்கு கேட்டுக்கொண்டும் ஒரே நேரத்தில் நடக்கும் இவ்விரகஸியத்தைக் கண்டோர் சொல்வது எப்படி! மற்றோர் காணமுற்படுவது எப்படி! அறிவின் ஆராய்ச்சியாலேயே அறியவேண்டும்.

25. அவனன்றி அணுவு மசையாது! ஆம், உன் நினைப்பின்றி ஒன்று மசையாது.

26. சுவாமி நனைந்து விட்டீர்களே?

அம்மா! நான் நனைவதே இல்லை!

சுவாமி! உடல் நனைந்தது.

உடலா நனைந்தது?

இல்லை, யில்லை! அறிவு தான் நனைந்தது.

அறிவா நனைந்தது?

இல்லை அம்மா! உடல் நனைந்ததை அறிவு அறிந்தது

27. சுவாமி! நினைப்புதான் வேகமுள்ளதா? அப்பா! அவ்வேகத்தின் நிறைவே எங்குமுள்ளது. அது நிரந்தரமாய் உள்ளது என்றும் சொல்லலாம். அதை யறியக் கூடிய அறிவின் வேகமிருந்தால் அதை

யறிய முடியும். ஆகையால் அறிவின் வேகமே அவசியம். நினைப்பின் ஏக்கத்தாலேயே எல்லாம் சிருஷ்டி; அறிவின் வேகத்தாலேயே அதை யறியக் கூடும்.

28. அன்பின் பரவசத்தால் அறிவைப் பெருக்கிட
துன்பங்களை யெல்லாம் தொலைத்தேவிட்டு
அறியாமை யான அடிமையை ஒழித்தேவிட்டு
விவேகமில்லா விவகாரங்களை அழித்தேவிட்டு
அது இது என்ற துவிதநிலையை எரித்தேவிட்டு
அங்கிங்கெங்கும் நிறைந்த நான் என்ற
தன் நிலையில் நழுவாது நிலைத்திட வந்தோர் யார்?
வருவோர் யார்? அவரே என் நிலைக்குடையோர்.

29. சுவாமி! ஆத்மாவுக்கும், அன்பு, அருள், அறிவுக்கும் வித்தியாசம் என்ன?

கனியைப் போன்றது ஆத்மா; சுவையைப் போன்றது அறிவு; அழகு போன்றது அருள்; வாசனையைப் போன்றது அன்பு.

30. சுவாமி! கடவுளின் தன்மை தான் என்ன? கேள்வி கேட்பதும் பதில் சொல்வதும் அவனே

தானாக இருப்போரின் சொல்லினிமை.

31. நானே உலகம், உலகங்கள்.

32. ஏக்கமே உலகம், உலகங்கள்.

33. உணர்வின் உணர்தலின் உணர்ச்சியே உலகம், உலகங்கள்.

34. அமைதியின் அன்பின் ஏக்க வேகமே உலகம், உலகங்கள்.

35. மடலாய், விடலாய், கடலாய், திடலாய், உடலாய், உலகம், உலகங்கள்.

36. சத்தாயிருந்து, சித்தாய் வளர்ந்து, சமமாய் அமர்ந்த பூரிப்பின் பூஞ்சிரிப்பின் புகழ்ச்சியே உலகம், உலகங்கள்.

37. அருளால். அருளின் விரைவால், விரைவின் விளைவால், விளைவின் விரிவால், விரிவின் சுழலால், சுழலின் சுகத்தால், சுகத்தின் பெருக்கால், பெருக்கின் பிரிவால், பிரிவின் உறைவால், உறைவின் உணர்ச்சியே உலகம், உலகங்கள்.

[பரஞ்சோதி 1 ம் பக்கம், 12 ம் பக்கம்; ஆதியும் உலக இணைப்பும் 1 ம் பக்கம்; ஆருதாரம் 41 ம் பக்கம்; இவைகளில் பார்க்க.]

38. காரணம் அறியா கடல், காடு, மலை
ஏறினால் தானென்ன?
கருவறியா காலமெல்லம் தவம்
செய்தால் தானென்ன?
பலனறியா பல பாடு
பட்டால் தானென்ன?
தன் ஏக்கம் தானென்றறியாது
தரையில் விழ்ந்து மாள்வார் தானே.

39. சொல்லுக்குள் சொல்லறியார்,
ஜோதியைத் தன்னுள் அறியார்
தனக்குள் தனை அறியார்,
தவமும் தானும் ஒன்றும் அறியாரே.

40. முதலும் முடிவுமில்லாதது இருள்
முதலும் முடிவும் தானுயுள்ளது நினைவு
ஏக்கத்தின் பதிவெல்லாம் அறிவில்
அறிந்ததும், அனுபவித்ததும், அறிவிலேயே.

41. அடைப்பினும் அடைப்பேன்,
உடைப்பினும் உடைப்பேன்,
அகல உயர கரைகளை வளர்ப்பினும்
வளர்ப்பேன்,
எல்லாம் அழித்து ஏகமாய் நிரப்பினும்
நிரப்புவேன்,

அந்தந்த சமயத்திற்குத் தகுந்த அர்த்தங்களை எடுத்துக்காட்டி, நடத்துவோர் யார்? என் இருதயமலர்களாகிய மெய்யுணர்வாளர்களே!

42. துரிதத்துக் கேது துன்பம்
அன்புக் கேது அவமரியாதை
அறிவுக் கேது குற்றம்
அக்கினிக் கேது குளிர்
நாதத்துக் கேது தனியிடம்
ஆதிக் கேது அழிவு
இருளுக் கேது எதுவும்
அறிவறிந்தோர்க்கு ஏது இணை.

43. நினைப்பு இல்லையேல் ஒன்றுமில்லை.
ஒன்றுமே இல்லையா?
ஒன்றை நினைத்த போது எல்லாமே உண்டு.
நினையாதிருந் திருந்தால்?
சொல்லே இல்லை. சுகம் என்ன?
சொல் இல்லா சுகத்தில் இருந் திருந்தால்?
சுகம் சுகித்தது எது?

44. ஓசை வந்தது எங்கிருந்து?
ஓசை போவது எங்கே?
விளக்கு எரிவது எங்கிருந்து?
விளக்கு அமர்ந்தது எங்கே?

தான் வந்தது எங்கிருந்து ?
தான் போய்ச்சேர்வது எங்கே ?
முடிவின் முடிவான உணர்வில் ஆராயுங்கள்.

45. சுவாமி! இந்நூல் தாங்கள் எழுதியதா ?
இல்லை, நீ எழுதியதே.
சுவாமி! நானா எழுதியது?
ஆம், நானே எழுதியது.
நீயே எழுதியிருக்கின்றாய், நன்றாய்ப் பார்!

46. சுவாமி! எந்நூலுக்கும் இந்நூலே மூலம் என்ற தற்கு ஆதாரம் என்ன?
ஆதாரம் நானே.
மற்ற நூலின் ஆதரவில்லையா?
அப்பா, எல்லா நூலும் என் ஆதரவை அடைய என்னையே போற்றித் தேடிவருகின்றன.

47. சுவாமி! நீங்கள் வணங்குகின்றீர்களா ?
அப்பா, நானா? அநேக இடத்தில் வணங்க வைத்துக் கொண்டும்
உன்னிடத்தில் சரியாகப் பேசிக்கொண்டும்
நான் என் நிலையிலேயே இருந்து கொண்டும்
இருக்கின்றேன்.

48. நீங்கள் என்னைவிட்டு மறைந்தாலும் நான் உங்களை விட்டு மறைந்தவனே அல்ல. என்னைத் தேட முற்படுங்கள். உங்களை நீங்கள் அடைவீர்கள்.

அன்பால் நிரம்பி அதுவாய் அமர்ந்தேன்
கேட்கும் சொல்லெல்லாம் என் சொல்லே
பார்க்கும் ரூபமெல்லாம் என்ரூபமே.
நடக்கும் செயலெல்லாம் என் செயலே
நானே என்னில் நானானதில்; நாமே நாம்.

## உணர்தல்

49. விழிப்பு, ஆற்றல், தெளிவு, சிந்தனை கூடியது நாதம். இதுவே உணர்வின் உணர்தல்.

(ஒரு மொழியில் பார்க்க. ஆதியும் உலக இணைப்பும் 5ம் பக்கம் பார்க்க.)

50. சத்தியத்தின் முழக்கம் ஒன்று வருமுன் அறிவுக் காலோசனை கொடுக்கும் நாதம்,

சுகம் கொடுத்து சுகிக்கவைக்கும் சொல்லினிமை.

51. உலக நல்லடியார்களே! மெய்யுணர்வாளர்களே! குருவின் சத்தியத்திற்கு மாறாய் நடவாதீர்கள்.

52. குரு சத்தியத்திற்கும் அவர் விசுவாசத்திற்கும் மாறாய் நடப்போன், பெற்ற குழந்தையைத்தானே கொன்ற பாதகனைப்போல் ஆவான்.

கொன்றவேகமோ கொஞ்ச நேரம், பரிதாபமோ வெகுகாலம். சத்தியத்திற்கு மாற்றம் க்ஷணநேரமே. அதுவால் ஏற்படும் குற்றத்திற்குப் பிறவி எத்தனையோ?

53. என்சொல்லை நெஞ்சால் கேளுங்கள், மிக தைரியசாலி ஆவீர்கள்.

நெற்றியால் கேளுங்கள் மரண பயத்தை நீக்கிக் கொள்வீர்கள்.

சிரசால் கேளுங்கள், அறிவாய்ப் பிரகாசிப்பீர்கள்.

துரித நிதானத்தோடு நிதானியுங்கள், உங்களில் நீங்கள் அடைவீர்கள்.

## உணர்ச்சி

54. உலர்வின் உணர்தலின் வேகமே அக்கினியாயெது ஆகிறது. இதுவே ஜோதி.

55. நினைவே உணர்வு, தொனியே உணர்தல், அக்கினியே உணர்ச்சி. (பரஞ்ஜோதியில் பார்க்க.)

56. ஜோதிப் பொருளை அறிந்தபின்தான் அறிவை அடையவேண்டியிருக்கிறது. ஜோதிக்கு இப்பாலுள்ளதே அறிவு. கருதரித்ததின் பின்தான் அறிவின் மனிதரூபம். அக்கருவாகப்பட்டது சிரசில் சென்று தரிக்காமற் போனால் தன்பிரகாச அறிவு பூராவும் அறிய முடியாது.

57. உன்னை நீதேடும் மனிதனே !
கருவால் அறிவால் குருவால் கனலால்
இக் கடத்திலேயே கண்டுபிடி.

58. உடல் ஒடுக்கி உருவேனேன்
உள்ளம் கசிந்து உருக்கநீர் வடித்தேன்
உண்மையால் எனையடைந்தேன்
உருவப் பொருளை உச்சியில் அமர்த்தினேன்
உலகங்களுக்கெல்லாம் ஒருவனுயுருவானேன்
என் இருதயமலர்களே ! உங்களைப்பார்த்தேன்
பரலோகங்களெல்லாம் கடந்து பார்லோகங்களெல்
[லாம் பணியும் பொருளை
ஊசிமுனைவாசலில் பாய்த்தேன்
பற்றுன பற்றிலே பாவனையாயிருந்து
பற்றற்ற நிலையிலமர்ந்து பணிவில்லாத்
துணிவைப்பகர்ந் திருந்தேன்.

59. வீடுகட்டி வாசல் அடைத்துவைத்தது போன்றே குரு அடையா உடம்பு.

60. பசியோ பலயுக நாள் பசி
கண்டு கிடைத்த பொருளோ
மிருகசிகர மேல் சத்துடையது (குரு)

என்னைச் சூழ்ந்திருந்த இலந்தைமுள்
வேலியோ அகல உயரமுள்ளது (மதக்கொள்கை)

யதார்த்த துணிவின் அக்கினியை வைத்ததால்
வேலியும் எரிந்தது அதிலிருந்த துர்க்குண
கொடிய விஷ ஜந்துக்களும் மடிந்தன (சந்தேகங்கள்)

பசியும் தீர்ந்தது வேலியில்லாப் பரவெளியும்
கடந்தேன் அடைந்தேன்
அடைந்தோனின் பெயரே பரஞ்ஜோதியாம்.

61. என் இருதயமலர்களே!
அன்புகனியட்டும், அறிவு விரியட்டும்,
அருள் நிறையட்டும், கருதிரளட்டும்,
கனல் உருகட்டும், கடம் ஜொலிக்கட்டும்
ஆனந்த சமரசம் அண்டபிண்ட
சராசரங்களெல்லாம் நிறைந்து அமைதி
பெருகட்டும், பெருகியது, பெருகும்.

## அறிவு

62. உணர்வு தன் ஏக்கத்தால் அறிவை சிருஷ்டித்து அவ்வறிவில் யாவும் பதித்து பரப்புகிறது, பரவியது. இச் சந்தோஷப் புன்சிரிப்பின் சிறப்பின் வேகமே அணுக்களாய்ப் பிரிந்தது (பேரறிவில் பார்க்க)

63. ஆதியின் அரூபா ரூபம் உணர்வு (நினைவு)
நினைப்பின் விழிப்பு நாதம்
நினைப்பின் ரூபம் ஜோதி
நினைப்பின் நிர்வாகம் அறிவில்

64. நினைவு பிடிபடாதவரை அரூபா ரூபத்தை சொல்ல முடியாதபடி இருக்கிறது. நினைவு பிடிபட்டு அறிந்து விட்டால் அதை எவ்விதமாய்ச் சொல்லலாம், சொல்லலாம் என்று மிகமிக உழைப்பும் துரிதமும் வேகமும் இருந்து கொண்டு இருக்கிறது. பின் அவ்வொருவஸ்துவை அநேக உதாரணங்கள் வாயிலாக திடப்படுத்திச் சொல்லிச் சிறப்பிப்பதே இந்நூல்.

65. அநேக யுகங்களாய்ப் பாடுபட்டு அதன்பலன் 42-வருஷங்கள் அனுபவித்து என் முடிவுக்கு மேல் முடிவில்லா மூல முடிவையே நூலாகச் சொல்லியிருக்கின்றேன்.

66. சுவாமி! இந்நூல் பார்ப்பதால் பயன் என்ன? அப்பா, சந்தோஷம் எல்லா தத்துவங்களின் முடிவையே சொல்லியிருக்கிறேன். முடிவறிய முற்படுவோர்க்கு முடிவும் அறிந்து, அறிந்ததற்கு ஆராய்ச்சியும் நிறைந்திருக்கிறது. உதாரணம் கரைதெரியாக் கடலில் கரை காட்டுவதுபோல்.

67. பிறந்ததோ கூரைவீடு
வளர்ந்ததோ சிறகாரை வீடு [வீடு
என்னை நான் அறிந்ததோ பெரிய மைதான மேல்

அனுபவிப்பதோ கூடான இருட்டு
ஸ்தூல வீட்டில் (சரித்திரம்)

68. என் சக்தியாய் நான் இருக்கிறேன். உன் சக்தியை நீ ஏன் மறந்தாய்? இவ்வன்பின் சொல்லில் அவதறித்தாயானால் அவனுமில்லை நீயுமில்லை, நானுமில்லை. நானே!

69. கவலையில்லா சிரித்த முகமாய்க் கண்ணாடி பார், அதுவே என் முகம்.

## ஏக்கமும் அறிவும்

*70.* ஓரறிவாய் வளரும் அறிவில், உள்ளுள்ள நினைவுதன் ஏக்கப்பூர்த்திக்காகவும், ஓரறிவாயுள்ள அணுக்கள் தன்னுடைய ஏக்க நினைவை யறிய வேகவளர்ச்சிக்காகவும் வளருகிறது.

*71.* வாய்க்காலில் போகும் தண்ணீர் மண்ணை விலக்கி அகலித்துச் செல்லச் செல்லப் பின் ஆருக விரிகின்றது. தண்ணீரும் தடையின்றி சென்று கடலில் கலந்து கொள்கிறது. அதேபோல் ஏக்கம் அறிவின்பெருக்க அனுபவத்தின் வாயிலாக அவ்வறிவின் பிரகாசத்தைப்பெருக்கிப் பெருக்கித் தன் அனுபவங்களை யெல்லாம் அனுபவித்து முடிவடைகின்றது. (விரியும் ஆற்றின் கரைகள் அறிவு, அதில் செல்லும் நீர் ஏக்கம் மாகும்.)

*72.* திரியில் செல்லும் எண்ணெயின் வேகம் தன் ஏக்கப்பூர்த்திக்காகவும் அவ்வெண்ணெயால் பிரகாசிக்கும் பிரகாசம் தான் எதுவால் பிரகாசிக்கின்றோம் என்பதை அறியவேண்டுமென்ற ஏக்கத்துடனும் இவ்விரண்டும் சேர்ந்து ஒரு ரூப வெளிச்சமாய்ப் பிரகாசிக்கின்றது. அப்பிரகாசத்தால் அவ்வேக்கத்தைக் கண்டுபிடிக்க முடியாததால், மேலும் மேலும் பிரகாசிக்க முற்படுகிறது. தன் ஏக்கம் பூர்த்திக்க இவ்வளவு பெரிய பிரகாசமாய் அறிவும், இதன்வாயிலாக ஏக்கமும் இவ்விரண்டும் காரண காரியமாக வளருகின்றன: பரவுகின்றன.

*73.* ஏக்க நினைப்பினுடைய பரவுதலான நிரவுதலில் தன் அறிவின் பிரகாச அளவுக்குத் தக்கவாறு இந் நினைப்பின்சக்தி சிறிது சிறிதாய்த் தெரியவருகிறது. பின் அறிவின் முடிவில் அறிவுக்கு இந்நினைவு பிடிபடுகிறது. உதாரணம். நீர் நிரம்பிய பெரிய பாத்திரத்தில் சிறு சாய உருண்டையைப் போட்டால் எவ்வளவு தொலைவுக்குப் பரவுகிறதோ

அதைப்போன்றும், பின் அந்நீர்முழுதும் சாயமாக மாறு தல் போன்றுமே அறிவின் பிரகாசம் விரியும்வரை துர்வித மாயும் முடிவில் ஏக நினைப்பின் சக்தி தன் சக்தியாய் மாறி விடுவதும். (ஆதியும் உலக நினைப்பும் 4-ம் பக்கம் பார்க்க).

74. நீங்கள் யார்? யார்? நான் ஏறிய வாகன உலகத்தில் ஏன் வந்தீர்கள்?

அனுபோகிக்கவந்த ஏக்கமுடையவர்கள்தானா? அனுபோகிப்பதை அறிந்து அனுபோகிக்கிறவர்களா? அனுபோகித்தது போதும், போதும் என்று தன்னை யறிய முற்பட்டவர்களா? இல்லையேல், தன்னை யறிய முற்பட்டதை மறந்து இப்பிறவியில் அறிவதற்குப் பிறந்தவர்களா?

நான் எடுத்துச் சொல்லும் சொல்லிலேயே மறதி தெளிந்து அறியக் கூடிய வல்லமை யுடையவர்கள்தான் இவ்வுலகத்தில் வந்திருக்கவேண்டும்.

இதில் நீங்கள் யார்?

75. வேர்வேறு முளைவேறு மரம்வேறு வித்துவேறு
சுவைவேறு சுகித்தறிந்த அறிவு வேறோ?
துளிவேறு மழைவேறு நீர்வேறு ஆறுவேறு
கடல்வேறு கடந்து கண்டறிந்த கருத்துவேறோ?
நிலம்வேறு கால்வேறு தலைவேறு உடல்வேறு
வீடுவேறு ஊர்வேறு உலகம்வேறுஉள் அனுபவித்து
வந்த ஏக்கம்வேறோ?
கண்வேறு காதுவேறு கருவேறு மறைவேறு
நீதிவேறு மதிவேறு நாடிவந்த நாட்டம்வேறோ?
வெப்புவேறு நெருப்புவேறு வெளிச்சம்வேறு உருவு
வேறு அணுவேறு
இவன்வேறு அவன்வேறு சூரியன்வேறு சோதிவேறு
என்சொரூபம் வேறோ?

தொனிவேறு சப்தம்வேறு நாதம்வேறு ராகம்வேறு
வேதம்வேறு செபம்வேறு என்சொல் வேருே ?
நினைவுவேறு உணர்வுவேறு உயிர் வேறு சக்தி வேறு
கடவுள்வேறு
நீவேறு எங்கும் எதிலும் நிறைந்த நான் வேருே ?
வேறில்லை நானே.

## அணுவில் உணர்வு, உணர்தல், உணர்ச்சி.

76. அணுவில் உள்ளுள்ள ஜோதி உணர்ச்சியாயும் அதிலுள்ள நாதம் உணர்தலாயும் அதில் பதிந்த ஏக்க நினைப்பு உணர்வாயும் இருக்கிறது.

77. சர்வவல்லமை யுள்ள நான் என்ற ஏக்கம் பரம ஜீவஆத்ம அணு. அதுவே மனிதன் (ஆதியும் உலக இணைப்பும் 65-ம் பக்கம் பார்க்க)

78. உணர்ச்சியின் உணர்தலின் உணர்வே
வித்து ஓரறிவு (மரம்)

உணர்ச்சியின் உணர்தலின் உணர்தலால்
உணர்வு ஈரறிவு (புழு)

உணர்ச்சியின் உணர்தலின் உணர்தலாய்
உணர்ந்த உணர்வு மூவறிவு. (ஈ, கொசு)

உணர்ச்சியின் உணர்தலின் உணர்தலால் உணர்ந்து
உணர்ந்த உணர்வு நாலறிவு (வண்டு, பறவை)

உணர்ச்சியின் உணர்தலின் உணர்தலால்
உணர்ந்து உணர்ந்து உணர்ந்த உணர்வு
ஐயறிவு. (மிருகம்)

உணர்ச்சியின் உணர்தலின் உணர்தலின்
உணர்தலால் உணர்ந்து உணர்ந்து
ஊகித்த உண்மையே ஆறறிவு (மனிதன்)

## ஓரறிவு

79. உணர்ச்சியின் உணர்தலால் உணர்வு.

ஒரு குண அணுக்களின் சேர்க்கையின் வேக உணர்ச்சியில், உணர்தலின் வளர்ச்சியால் வித்தின் விளைவு உணர்வாய் முடிகிறது.

## தாவரம்

80. மரத்தின் தோற்றம் உணர்ச்சியாயும் அதன். உள்வளர்ச்சி உணர்தலாயும் வித்தின் விளைவு உணர்வாயுமிருக்கிறது.

## வித்து

81. வித்திற்கு மேல்தோல் உணர்ச்சியாயும் அந்த வித்தின் குணம் அல்லது அதன் இனம் மெல்லிய உள்ளுள்ள தோல் உணர்தலாயும் பரிசுத்தமாய் விளைந்து முடிந்த வெள்ளை வித்து உணர்வாயு மிருக்கிறது

விளைந்த சுத்த வெள்ளைப்பருப்பில் வெள்ளையாயுள்ள ஜோதி உணர்ச்சியாயும் அதன் உள்ளுள்ள நாதம் உணர்தலாயும் அதன் ஏக்க நினைவு உணர்வாயு மிருக்கிறது.

## பழம்

82. தோற்றம் ஸ்தூலம், சுவை சூக்குமம், குணம் காரணமாக இருக்கிறது.

இந்த ஓரறிவு தாவரத்தில் வித்துக்குள் மட்டும் வெள்ளைப்பருப்பில் மூன்று தத்துவமும், அதன் மேலிருக்கும் மெல்லிய தோலில் தன் இன தத்துவத்துடன் சேர்ந்து நான்கு தத்துவமும், அதன் மேலுள்ள வல்லமையான தோலில் அல்லது ஓட்டில் தன் சரீர பாது காப்பின் தத்துவத்தோடு நான்கு தத்துவமும் ஆக பதினொரு தத்துவங்கள் கொண்டதே ஒரு வித்து.

83. ஓரறிவாகும்போதே, ஒரு போதனையுமில்லாது தன் உணர்தலின் சக்தியால் வித்தாய் விளைந்து, அவ்வித்து விழுந்த இடமெல்லாம் அவ்வினம் அதிகரித்தது, அதிகரிக்கிறது. ஆரறிவுடைய மக்களே! எங்குமே போதனைகள் போதிக்கப்படும் அறிவுலகில் பேதக மில்லா சமத்துவ ஒற்றுமையால் சத்தியம் விளைவித்து அச்சத்தியம் பரவுவது ஒரு கஷ்டமோ!

84. என் இருதயமலர்களே! என்னை அடித்துக் கேளுங்கள், அனபில் எப்படி இருக்கவேண்டுமென்று நான் சொல்லுகிறேன், கடலைப்போல் நிரந்திர சமமாய் இருங்கள். கடலுக்கு அணையுமில்லை. சூரியன் பிரகாசிக்கா இடமுமில்லை. கங்கு கரையின்றி அன்பை பரப்புங்கள். அறிவின் பிரகாசம் நிறைந்தே இருக்கும். உலகீர்! நீங்களே சுவர்களை வளைத்துக்கொண்டு சூரிய வெளிச்சமில்லை என்பதைப்போல் அன்பில் பேதகம் வைத்துக்கொண்டு அறிவு பிரகாசமில்லை என்று சொல்லாதீர்கள்.

85. சூரியனை மேகம் மறைப்பது போல் உங்கள் சந்தேகம் அறிவின் பிரகாசத்தை மறைக்கிறது. வெளிச்சத்தை எப்படி சுவர் தடுத்துக்கொள்ளுகிறதோ அதே போல் உங்களுடைய அறிவின் பிரகாசத்தைதுவேஷம் தடுத்துக் கொள்ளுகிறது.

86. கடல், மலை, ஆகாயம் ஏறுவது துணிவிலும் துணிவானாலும், அத்துணிவிலும் ஏகமேல் துணிவு, ஆராய்ந்து, அறிவதுவே யாகும்.

87. குப்பையை எரித்து நடுக்கடலில் கலக்க குப்பையும் தொலைந்தது, குறையும் தீர்ந்தது.

88. உலக நல்லடியார்களே! என் இருதயச் செல்விகளே! செல்வர்களே! உங்கள் குழந்தைகளிடத்திலும் துணைவி, கணவனிடத்திலும் புன் சிரிப்பாய்க் கண்டியுங்கள். இதில் எல்லோரும் நல்லவர் ஆவார்கள். புன் சிரிப்பின் பார்வையால் பழய குற்றமெல்லாம் எரிந்து புதிய குற்றத்திற்கு ஆளாகார்.

89. அன்பில் நீராயிருந்தால் பள்ளம் நிரவி
யும் பள்ளம் பள்ளமே.
அன்பில் நெருப்பாயிருங்கள்
குளிரும் காய்வர். அழுக்கும்
எரிந்து அறிவும் பிரகாசிக்கும்.

90. உடலுக்கா தரவு பூமி
குடும்பத்திற்காதரவு பொறுமை
அறிவுக்காதரவு அன்பும் அனுபோகமும்
அருளுயிர்க்கா தரவு குரு.

## சிருஷ்டி

91. முதலில் ஏக்கம் ஜோதியாய் விளைந்து அணுக்களாய்ப் பிரிந்ததும் உலகங்களாய் நிறைந்து முதலில் ஓரறிவுப் பொருளாய் நின்று விளைந்தது.

## தோற்றம்

92. ஓரறிவு குண அணுக்களின் தோற்றம் 1041 4515 3000 கோடி உருவமாக புல் பூண்டு செடி கொடி மரங்களாக இருக்கின்றன இந்த ஓரறிவின் முடிவான விளைந்த வித்தால் அதே இனமாக அதிகம் பரவுகின்றன.

வித்தில் தன் இனத்தைக் குறிக்கும் மேல் தோல் நீங்கி விட்டால் ஈரறிவாக மாறுகின்றது. இந்த ஈரறி

வாய் நகர்ந்து நுகரக் கூடிய ஜீவஜந்துக்களின் தோற்றங்கள் 103318 கோடி உருவத் தோற்றங்களாகும்.

ஈரறிவு ஜீவ ஜந்துக்களும் இதை விட்டு மேலினமாக வந்தவுடன் மூவறிவு ஜீவஜந்துவாக மாறுகின்றன. இவை 10 கோடி உருவத் தோற்றங்களாகும்.

இதற்கும் மேலினமான நாலறிவு ஜீவ ஜந்துக்கள் 10 லக்ஷ உருவத் தோற்றங்களாகும்.

இதற்கும் மேலினமான ஐயறிவு மிருகங்கள் 2,29,000 உருவத் தோற்றங்களாகும்.

ஆரறிவுள்ள மனிதனின் முக உருவத் தோற்றங்கள் 1200 விதங்களாக உலகில் பரவுகின்றன.

## குணம்

93. 1041 4515 3000 கோடி குணுதி விஷயங்கள் ஓரறிவு உருவங்களாய் வளர்ந்து வித்தாய் விளைந்தகின் பின், இந்த குணத்தினுடைய வல்லமைக்கேற்றவாறு ஈரறிவாகவும் மூவறிவாகவும் அதிலிருந்தே உற்பத்தியாகின்றன. உதாரணம்—சிலமாவில் புழுக்களும் சிலமாவில் வண்டுகளும் சிலமாவில் விஷ ஜந்துக்களும் உற்பத்தியாகின்றன இதற்குக்காரணம் விளைந்த பொருளின் குணத்தினுடைய வல்லமையேயாகும். இதில் ஓரறிவு முதல் ஆரறிவுயிர்கள் வரை ஒவ்வொன்றிலும் மேல்கண்ட எண்ணிக்கைகள் கொண்ட ரூபா ரூபங்கள் உண்டாகிப் பின், மனித ரூபா ரூபத்தில் மேல் கண்ட 1041 4515 3000 கோடி குணுதி விஷயங்களும் வந்து முடிவடைகின்றன. அதாவது, முதலில் பரவி விரிந்திருக்கின்ற குணங்களெல்லாம் மனிதனில், வந்து முடிவடைந்து கொள்கின்றன. அவ்வாறு முடிவடையா குணங்களெல்லாம் மனித ரூபத்தில் ஆட்சி புரிகின்றன வென்றே சொல்லலாம்,

சுவை

94. 10445153000 கோடி குணுதிவிஷய வித்தியாசங்களெல்லாம் உப்பு, உரைப்பு, துவர்ப்பு, புளிப்பு, அறுசுவையாய் ஒடுங்குகின்றன. இந்த அறுசுவையும் ஈரறிவிலிருந்து ஐயறிவுவரை ஆத்ம சக்தியோடு இணைந்து ரூபமாய் அனுபவித்துவருகிறது. ஆரறிவு மனிதனுகிய பின் அறுசுவையின் முடிவும் வல்லமையும் ஏற்படுகிது. அறுசுவையும் அறுசுவையாக அனுபவிக்கும் மனிதர் ஒரு சிலரே. சுவை அறியாத மக்களிடம் அறுசுவையும் ஒரு சுவையாக மாறிவிடுகிறது. சுவை அறிந்து அனுபவிக்கக் கூடிய மனிதரிடம் ஒரு சுவையும் அறுசுவையாக மாறி முடிவடைந்து கொள்ளுகின்றது.

95. இந்த அறுசுவையாய் உள்ள குணுதி விஷயங்கள் ஒரு விநாடிக்கு,—சிறு ஆராய்ச்சிக்குக் கொடுக்கின்றேன்,—12 குணங்கள் கல்பமாய்ச் சுற்றி வருகின்றன. அதை மீண்டும் நுட்பமாய்க் கவனித்தால் 40 குணங்களுக்கு மேல் என்றும் அறியலாம். மேல் கண்ட 12 குணங்களில் அறிவின் அம்சம் 2 ஆகும். இந்த 2 குணங்களின் நிர்வாகத்துக்குப் படிப்படியாய் மற்ற 10 குணங்களும் கட்டுப்பட்டு வரவர எல்லா குணங்களும் அறிவின் அம்சமாகவே மாறிவிடும். 6 குணங்கள் அறிவின் அம்சமாக மாறுகிறவரையில் ஜாக்கிரதையுடன் நுட்பமாக கவனித்து நடந்துக் கொண்டால் பிறகு மற்றவை தானுகவே அறிவின் அம்சமாக மாறியே விடும். அறிவாக வந்து அனுபவித்து முடிப்பதற்குத்தான் எல்லா குணுதிவிஷயங்களின் வேகமும். அவை மனிதனிடத்தில் வந்து உணர்ந்து அறிவில்

சேர்ந்துக் கொண்டதனுல் அக் குணுதிவிஷயங்கள் மனிதனில் முக்தி அடைந்து விட்டதாகின்றது. மனிதனே அறிந்து அனுபவித்து வல்லமையுடையவனுகிருன்.

96. உப்பின் அம்சம் உடம்பு. உறைப்பின் அம்சம் இரத்தம். துவர்ப்பின் அம்சம் விந்து. புளிப்பின் அம்சம் ஜீரணம். கசப்பின் அம்சம் அமைதியின் குணம். தித்திப்பின் அம்சம் அறிவின் பிரகாசம்.

97. அறுசுவையின் அதிக விளைவு பாஷாணம் பாஷாண விளைவின் முடிவே நவரத்தினங்கள்.

அசுத்த நீர் கால்வாய், பெரிய ஆற்றில் சேர்ந்து கொண்டால் அசுத்தம் சுத்தமாகிறது. அதே கால்வாய், நல் நீருள்ள சிறு குளத்தில் சேர்ந்தால் அம் நன்னீரையும் கெட்ட நீராக மாற்றி விடுகிறது. மனிதன் எதைக் கெட்டது என்று உணர்ந்தானே அக்கெட்டது நல்லதில் சேர்ந்து நல்லதாக மாறிவிடுகிறது. கெட்டதென்றே அறிந்து மீண்டும் செய்வானுனல் இவன் சேகரித்தஅறிவை அது கொள்ளை அடித்து அறிவீனனுக ஆக்க முற்படுகிறது. உடம்போ மனிதன், உள்ளிருக்கும் குணமோ, மனிதன் தானே? மனித உடம்பில் மற்ற குணங்கள் நிர்வாகம் நடத்துகின்றன. கெட்டது நல்ல பிறவிக்கு ஆளாகவே ஏக்கம். நல்லது கெட்டதில் சேர்ந்தால் மனிதன் அக்ஷணமே அறிவில்லாப் பிறவிக்களாகிருன். இதற்காக வேண்டியே, மனிதர்களே! உங்களில் நீங்களாக இருக்கின்றீர்களா என்று கேட்பதுண்டு. உலகில் அறிவறிந்தோர், பொது நீதியாய் இருக்கக்கூடிய அறிவின் நிர்வாகங்கள் எந்தெந்த விதமாக இவ்வுலகில் இருக்க வேண்டு மென்பதை அறிந்து நடத்துங்கள்.

98. ஓரறிவு குண அணுக்கள் விளைந்தவுடன் முதன் முதலில் ஈரறிவிலிருந்து ஆரறிவுவரைப் படிப்படியாக

உயர்ந்து மனிதசரீரம் பெற்றது. (ஆதியும் உலக இணைப்பும் உலகத் தோற்றங்களின் உற்பத்தி மனித ரூபத்தோற்றம் பார்க்க.) பின் இவற்றின சரீரங்கள், ஓரறிவுப் பொருளை எதை சாப்பிடுகிறதோ அதற்குத்தக்கவாறு ஈரறிவாகவோ ஆரறிவாகவோ மாறிவிடுகிறது. உதாரணம். ஒரு பலாச் சுளையை ஈரறிவு ஜீவ ஜந்து உண்ணும் பட்சத்தில் ஈரறிவின் விந்தின் நீராக மாறிவிடுகின்றது. அதே பலாச் சுளையை ஆறறிவுள்ள மனிதன் சாப்பிடும் பட்சத்தில் அது ஆறறிவாகிக் கொள்வதுடன் விந்தில் உறைந்தால் மனித உருவத்தோடு சேர்ந்துக் கொள்கிறது. அதிலும் நற்குண மனிதன் சாப்பிட்டானானல் நற்குண இனத்தோடு சேர்ந்து நற்குணம் உலகில் பெருகுகின்றது. துற்குண மனிதன் சாப்பிட்டானானல் துற்குண இனத்தோடு சேர்ந்து துற்குணம் உலகில் பெருகுகின்றது,

## ஈரறிவு முதல் ஆறறிவு மனிதன்

*99.* ஓரறிவு இனி ஏது செய்வதென்ற ஏக்கத்தால் நகர்ந்தும், நுகர்ந்தும் ஈரறிவாகின்றது. இதற்குத்தனி மூக்கு மட்டும் உண்டு. ஓரறிவால் விளைந்தவித்து தன்னலத்தோடு (வித்தின் மேல்பாகத்தோல்) இருக்கும் வரை அது தன் இனமாகவே பூமியில் பரவுகின்றது. தன்னலமாகிய தோல் நீங்கி விட்டால் அது ஈரறிவாக நுகர்ந்து நகர்கின்றது. இந்த ஈரறிவு ஜந்துக்கு ஆகாரம் ஓரறிவாயுள்ள பொருள்களே. ஓரறிவாய் விளைந்த வித்து ஈரறிவாகும் போது வித்து என்றபேர் நீங்கி விந்து நீராகி விடுகின்றது. இது நீராக இருக்கும் வரையிலும் ஈரறிவு ஜீவ ஜந்துக்களாகவே உலகில் பரவுகின்றன.

*100.* ஈரறிவாகிய பின் அதிலும் எட்டாததால் கேட்கும் சக்தியோடு மூவறிவாகிறது. இதற்குக்காது உண்டு இந்த ஜீவ ஜந்துக்களுக்கு விந்து வெள்ளை நிறமாகி

விடுகின்றது. தன்னலம் இருக்கும் வரையிலும் மூவறிவாகவே அது பரவுகின்றது.

101. இதிலும் பூர்த்திக் காததால், தன்னலத்தை விட்டு ஒருபடி பெரிதாகி கண் பெற்று நாலறிவாகிறது. இதற்குப் பின்தான் ஆண், பெண், உருவ மேற்படுகிறது. இதுவரை சேர்க்கை கிடையாது. பல இயற்கைச் சேர்க்கையால் உருவ மேற்பட்டு வந்தது. தைரிய தீரத்துடன் இருக்கக் கூடியதெல்லாம் ஆண் அணுக்களாகவும் தைரிய வேகத்தில் சலனமும் அமைதியும் ஏற்பட்ட அணுக்கள் பெண் அணுக்களாகவும் பரவுகின்றன. ஆண் அணுக்களில் நாத சக்தி அடங்கி தீர சக்தி அதிக முண்டு. பெண் அணுக்களில் நாத சக்தி அதிகமாய்ப் பரவி ஆசை சக்தி அதிக முண்டு. நாலறிவுக்குப் பின்புதான் ஒன்றைப் பார்த்து மோகிக்க ஏதுவாகின்றது.

102 நான்கறிவுள்ள ஜீவன்கள் அனுபவித்து அதனால் தரிக்கக்கூடிய உருவங்கள் ஐந்தறிவாகின்றன. இதற்கு விசுவாசம், சிந்திக்கக்கூடிய வல்லமை, இனம் தெரியக்கூடியசக்தி, இவை இருக்கின்றன.

இதிலும் திருப்தி அடையாததால் அறிவினுடைய சித்தரிப்பால் நல்லுடம்பாகிய ஆறறிவு உள்ள மனிதனாகி அறிய அடையக்கூடிய ஆற்றலே உலகம்.

## மனிதன்

மரத்தின் சுவை மரம் அறியாததால் ஓரறிவாகும் சுவை அறிந்து சுகிக்கும் ஆறறிவுள்ள மக்களே! சுகிப்பானேன்? சுகிப்பது எது? சுகித்ததெங்கே?

நகர்ந்து, நுகர்ந்து, எங்கே செல்வது, சென்றிருப்பது எங்கென்றறியாதது ஈரறிவாகும். நடந்து சென்று அமைதிபெறும் ஆறறிவுள்ள மக்களே! எங்குவந்திருக்கிறீர்கள்? வந்த காரியம் என்ன?

நகர்ந்து, நகர்ந்து கேட்டு கேட்பது இன்னதென்றறி யாததே மூவறிவாகும். கேட்ட சொல் சுவை எழுத்துக் குரிய ஆறறிவுள்ள மக்களே! எதுவால் பேசினீர்கள்? பேச்சின் முடிவெங்கே?

நகர்ந்து நுகர்ந்து கேட்டு விழித்து பார்த்தது இன்ன தென்றறியாததே நான்கறிவாகும். பார்த்த இடமெல் லாம் அறிவில் பதித்து வைத்திருக்கும் ஆறறிவுள்ள மக்களே! பார்த்து வந்ததெல்லாம் எது? பார்ப்பது ஆனந்திருப்பது எதற்காக?

நகர்ந்து நுகர்ந்து கேட்டு விழித்து தெளிந்து எது செய்து முடிப்பதென்றறியாததே ஐயறிவாகும். நாடிய காரியம் பூர்த்தி செய்யும் ஆறறிவுள்ள மக்களே! எதைச் செய் வது எதைச் செய்யாதிருப்பது?

நகர்ந்து நுகர்ந்து கேட்டு விழித்து, தெளிந்து தேர்ந்து மனிதனாய் வந்த மகத்துவம் அறியாததே ஆறறிவாகும். ஆறறிவையும் நிர்வகிக்கும் ஆறறிவுள்ள மக்களே! அறிந்ததெல்லாம் சரி, நீங்கள் அறிந்த மேல்நிலை எது?

ஆறறிவிலும் ஆருறறிவாய் அவ்வாருறறிவிலும் அவ்வாறறிவாய் அறிந்து பார்த்தாயாகில் மூலமுதலாய் இருந்து முதலை அடையும்போது, முழுதிலும் மூல காரணம் நீயல்லவோ. நானல்லவோ.

நாடுதல் - நடத்தல - கேட்டல் - தெளிதல் - சேர்த் தல் - அடைதல்.

நாடுதலில் - நடத்தல் - நடத்தலில் - கேட்டல்.

கேட்டலில் - தெளிதல் - தெளிதலில் - தேர்தல்.

தேர்தலில் - அடைதல் - அடைதலில் - அனுபோக முடிவு.

நாடுதலில் - வெகுகாலம் - நடத்தலில் - வெகுகாலம்
கேட்டதில் - சிறிதுகாலம் - தெளிதலில் - வெகுகாலம்
தேர்தலில் - சிறிது காலம் - அடைதல் - அக்ஷணமே

*105.* மனிதனுய் வந்த பின் ஒன்றும் தேடாதபடி சிறிது காலம் தங்களைப் பாற்றி அனுபவிக்கமட்டும் ஆற்றலுடையவர்களாய் இருந்து வருகிறார்கள். பின் வந்ததை அறிந்துபூர்த்திக்க நாடுதல் மட்டும்ஒவ்வொரு மனிதனிடத்திலும் இருப்பதுண்டு முதலில் கடவுள் உண்டோ, உண்டு என்று தேடுகின்றனர். இரண்டாவதாக, பெரியோர்களுடைய சொற்களுக்கு இணங்கி நாடலும் நடத்தலுமாக வருகின்றனர். மூன்ருவதாக பக்திக்கு முற்படுகின்றனர். நான்காவது கேட்டு அதன் படி நடக்க முற்படுகின்றனர். கேட்டதிலும் தெளிந்து மிக பெருகி யோகிகளாய் மாறுகின்றனர். அதிலேயும் தேர்தலும்' தன்னைத்தான் நன்ருகத் தெரிந்து கொள்ளும் வரையிலும் உள்ள அறிவும், பிரகாசித்து விட்டால் தன் ஆக்கினை ஸ்தானத்திற்கு மேலுள்ள வல்லமையின் பிரகாசத்தால் தன்னை அறிந்து அடைந்து கொள்ளுகின்றனர். இதுவே ஆதியும் முடிவுமாகும்.

### மனிதப்பெருக்கமும் விளைபொருள்களும்

*106.* உலக ஆராய்சியாளர்களே! இந்த உலகப் பரப்பில் விளைந்திருக்கின்ற விளைபொருள்களெல்லாம், ஈரறிவு ஜீவஜந்துக்கள் முதல் ஆரறிவு மனிதன் வரை, உண்டு சுகித்து அடைகின்ற காரிய வஸ்துக்களாகவே இருக்கின்றன. இதில் தன்னது என்று உரிமை பாராட்டாமல் இருப்பது ஐயறிவு மிருகம் வரை உள்ள ரூபங்களே. அறிவின் ஆகூறியுள்ள மனி

தரில் தன்னது என்று உரிமை பாராட்டிக் கொள் பவர் அநேகர். அவ்வாறு உரிமை பாராட்டாமல் பசி தீர்த்துக்கொண்டு இருப்பவர்கள் வெகு சிலரே. பூமி யில் விளைந்திருக்கின்ற பொருள்கள் மனிதர்கள் சம் பிரதாய சமர்த்துடன் சொந்தப்படுத்தும் அளவுக்குத் தக்கதாக சம்பாதித்து சுலபமாய் அனுபவிக்க வசதி பெற்றுள்ளார்கள். உலகின் பழைய நிலே மனித மக் கள் கொஞ்சமாகவும் விளைபொருள்களும் ஜீவ ஜந் துக்களும் அதிகமாகவும் இருந்து கொண்டிருந்தன. தற்போதும் இனியும் மனிதமக்களால் விந்துவின் கோஷ்டி அதிகமாகி மனிதப்பெருக்கம் அதிகமாகியும் விளைபொருள்கள் குறைவாகவும் இருந்து கொண்டி ருக்கின்றன. காரணம், மனிதமக்கள் குடியிருக்கச் செய்து கொண்ட பூமியில் சீர்திருத்த இடங்களாலும் தன்னது என்று சொந்தம் பாராட்டக்கூடிய மக்க ளின் பெருக்கத்தாலுமே. மனிதப் பெருக்கத்தோடு பூமியும் பெருகிக்கொண்டே போனுல் இது தோன் ருது. பூமியும் அகன்று பெருகிக் கொண்டே போகிற (ஆதியும் உலக இணைப்பும் என்னும் அத்தியாயத்தில் நமது பூமி இனி எப்போதும் அழியாது என்பதில் பார்க்க) அப்பெருக்கத்தைக் காட்டிலும் மனித மக்க ளின் பெருக்கம் அதிகமாகிக் கொண்டே போகிறது. விளைந்த பொருளோ பத்துபேருக்கு, பிறந்திருப்பதோ எண்பது பேர்.

## குழந்தைபெறுதலில் திட்டம்

**107.** ஒரு குடும்பத்தில் இரண்டு ஆண் ஒருபெண் அல்லது இரண்டு பெண் ஒரு ஆண், மூன்று குழந்தைகள் பிறந்தால் போதும்!

ஆண்குழந்தை பிறக்க வேண்டுமென்ருல் மூன்றங் குல அகலமும் ஆறடி நீளமும் உள்ள மெல்லிய துணியைக் கொண்டு வலதுதோளுக்கும் இடது தொடைக்குமாக இடது பீஜத்தை மேல் தூக்கிக்கட்டிப் புணரவேண்டும்.

பெண்குழந்தை உண்டாக இவ்வாறே இடதுதோளுக் கும் வலது தொடைக்குமாக வலது பீஜத்தை மேல்தூக் கிக்கட்டிப் புணரவேண்டும்.

குழந்தை அறவே வேண்டாததற்கு மாதவிடாயான 19 நாட்களானபின் போகித்துக் கொள்ளவும் போகம் எப் போதும் போகம் வேண்டியவர்கள் போகித்து சமயமறிந்து இந்திரியத்தைக் கீழே விட்டுவிடவேண்டும்.

எந்த அரசாங்கத்திலும் இவ்வுலகில் மனித சமூகம் இவ்வளவுதானிருக்க வேண்டுமென்ற நிரணயிப்பு அவசி யம் இருக்கவேண்டும் அப்படி இருந்தாலே அவனவன் கொண்ட ஏக்கத்தைப் பூர்த்திசெய்வதற்கும் அரசாங்க நிர்வாகம் குழப்பமில்லாமல் நடப்பதற்கும் அறிவின் அபி விர்த்திக்கும் புதிய ஆத்மா தடையின்றி இவ்வுலகத்திற்கு வருவதற்கும் ஏதுவாகும்] இதுவுமன்றி இன்னும் சில இரகசியங்களை எழுதாமல் விடுகின்றேன். ஆராய்ச்சி யாளர்களாகிய மெடிகல் டிபார்ட்மெனட் மேற்கண்ட வாறு நிர்வாகத்தில் கொண்டுவரவேண்டியது முக்கியத் திலும் முக்கியகடமை இது.

## ஆகாரத் திட்டம்

108. அவரவர்கள் மேலாகக் கொண்டுள்ள ஆகா ரங்கள் எதெதுவோ, அதுவே அவ்வவர்களுக்குச் சிறந்த தாகும்.

அநேக வகைகளுடன் உண்பதைவிட ஒரு இருவகை யுடன் உண்பதே சிறந்தது.

பகல் 11 மணியிலிருந்து 2 மணி வரை ஒரு வேளை ஆகாரம் மிக திருப்திகரமாய் உட்கொண்டால் எல்லா வகை சௌகரியத்துடன் சுகமுண்டு.

மனதைக் கீழ்ப்படுத்துவதற்காக எதையும் இரவில் உண்பதும் அம்மனதைச் சீர்திருத்தம் செய்ய உண்ணாம லிருப்பது நலம்.

அதனால் குடும்பம் தொழில் தவம் இவைகளுக்கு யாதொரு தடையே இல்லை.

வியாதி இல்லா சுகமும் அறிவின் உயர்வும் இதனால் ஏற்படுகிறது.

உலக மக்களே! நீங்கள் ஞானிகளின் உணவு உண்ணுங்கள் இராஜாக்களின் உடை உடுத்துங்கள். அப்போது அனுபவத்தில் கடந்த ஞானிகளாயும் அறிவில் இராஜனாயும் இருப்பீர்கள்.

எல்லாவகை சுக அனுபவங்களும் அனுபவிக்கின்றதே அறிவின் உயர்நிலையுடைய அனுபவமாகும். அதுவே பிறவியை முடிக்கின்றது. அநேக வசதிகள் இருந்தும் அறிவின பெருக்க நிலையில்லாது போனால் எதையும் அறிவாய் அனுபவிக்க முடியாது. அதனால் பிறவி எடுக்கிறான்.

## விவாகத் திட்டம்.

109. 1. பெண்கள் ருதுவாகியபோது அறிச்சயையைய் வெளிப்படுத்தவும், சடங்கு கணிதம் கனிப்பதும் பெரும் ஒழுக்கக் குறைவே அது கூடாது.

2. 18 வயதிற்குமேல் எக்காரணத்தை மேலிட்டும் பெண் குழந்தைகளை விவாகமில்லாமல் வைத்திருக்கக் கூடாது.

3. பெண்வயதிற்கு 10 வயதிற்கு மேற்பட்ட ஆடவர்களுக்கு எத்தகைய விருப்பத்தை முன்னிட்டும் விவாகம் செய்து கொடுக்கக்கூடாது.

4. ருதுவாகுமுன் விவாகமாகி, ருதுவாகுமுன்னே கணவன் இல்லாமற் போனால், விதவை என்று சொல்லவே கூடாது. உடனே மறு விவாகம் செய்தே வைக்க வேண்டும்.

5. குழந்தை யில்லா 40 வயதுக்குக் கீழ்ப்பட்ட பெண்கள் விதவையாக இருப்பதைக் காட்டிலும் விவாகம் செய்து கொள்ளுவதே உத்தமம்.

6. முப்பது வயதுக்குமேல் உள்ளவர் விவாகம் செய்து பெண்டில்லாமல் இருப்போர் விதைவையே மறு மணம் செய்துகொள்ள வேண்டும்.

7. தாரம் இருந்து குழந்தை இல்லாமல் மறு விவாகம் செய்து கொள்ளக்கூடாது. செய்துகொடுப்பதும் கூடாது.

8. பெண்கள் விவாகமில்லாத கன்னிகையாயிருப்பதில் ஆத்ம சாந்தியை விரும்பி, அந்நிலை நீதி, பொறுமை, விளைவிக்க அது ஒருமரியாதை கொடுப்பினும் அவர்களுக்கோ, அவர்களின் சரீரத்தின்பின் ஆத்மசாந்திக்கோ அவர்களால் உலகத்திற்கோ, யாதொரு பிரதி பிரயோஜனமும் கிடையாது,

9. அறிவு உடையவர்க்கே இன்பம், நீதி, ருசி, அனுபவம்.

10. ஆடவர்களுக்கு 21, 22 வயதுக்குள்ளாகவும், பெண்களுக்கு 14. 15 வயதுக்குள்ளாகவும் விவாகம் முடிப்பது சிறந்தது.

11. விளைந்த அறிவு அனுபவிக்கும் அனுபோகங்களை அடக்குவதும் குற்றமே. அடக்கா நீதியில்லா அநீதியில் அனுபவித்து அழிவதும் குற்றமே.

12. சரீர சிறப்பு, அறிவின் நீதியான அனுபவத்தின் இன்பமே இன்பம்.

13. மணம் முடிப்பதில், உடல்நிலை, குணம், உயர்வு, தொழிலின் முயற்சி, இவை பார்ப்பது அவசியம். நகை, துகை கூருதல் கேட்டல், அதிக செலவு செய்தல் கடன் வாங்கல், நன்கொடை விரும்பல், செய்தல், அறவே கூடாது.

14. தனி ஜெபத்தால், குருவால், வாழ்த்தால் நடத்துதல் கூடாது.

15. மாதம், கிழமை, நட்சத்திர நேர பாகுபாடுகள், சடங்குகள் இருக்கவே கூடாது.

16. வீடு பந்தல் உற்சாகமாய் அலங்கரித்தல், ராக சுவை வைத்தல், இனிப்பு, கனி, வாசனை, புஷ்பம் வழங்குதல் மிக சிறப்பு.

17. குறித்த நேரத்தில் அக்கூட்டத்தில் வந்துள்ள பெரியோர் ஒருவரால் மணமக்களின் சம்மதத்தில் மாலை சூட்டவேண்டியது. அக்கூட்டத்தின் சந்தோஷமே என்றைக்கும் சந்தோஷமாய் வாழ்வார்கள்.

18. தாய் தந்தை மாமி மாமன் மற்ற பெரியோர் அறுவசிய கட்டுப்பாடுகள் இல்லாமல் அவ்விருவர்களை அபிப்பிராய சுயேச்சையாய் வாழவைத்தல் வாழ்தல்.

19. அன்பு, பார்வை, பருவம், நீதி, உரிமை, கூடுதல், சேர்ந்ததே இன்பம்.

20 இதை அறிவுடன் கடைபிடிப்போரை அலக்ஷியம் கொள்வோர், சொல்வோர்க்கு ஏழு பரம்பரை குற்றம் பாதித்து தீரும்-

## அறிவின் விளைவு

110. உலக நல்லடியார்களே! ஓரறிவிலிருந்து ஆறறிவுவரை உணர்தலின் வேகபலனே மூக்கு, காது

கண் இவைகள் கிடைத்தன. அவை இப்போது உங்களில் அத்தாக்ஷியாக இருந்து கொண்டிருக்கின்றன.

நன்கு யோசித்து உணர்ந்தீர்களானல் அருபாரூப முள்ள அறிவின் கண்கள் அநேகம் கிடைத்து பிரகாசிக்கும். யோகிகளுக்கு மேல், பாடுபடும் ஆராய்ச்சியாளர்களுக்கு எவ்வளவோ அறிவின்கண்கள் கிடைத்திருக்கின்றன. இது அவர்கள் செய்த பெரும்பாக்கியமே. இன்று நிர்வாகம் எதனுல் நடைபெறுகிற தென்பதை ஆராய்ந்து பாருங்கள்.

## அறிவின் வளர்ச்சி

**111.** மனிதப்பிறவி உண்டு, உறங்கி, போகித்து, அடையும் சுகத்தோடு முடிவதல்ல. இந்நிலையிலேயே இருப்பவர்களுக்கு அறிவு வளர்ச்சிக்கு வழி இல்லை. அறிவு வளர்ச்சியின்றி ஓர் சிறிதளவு அனுபவிக்கும் இன்பம் மலைப் பள்ளியர் நிலைக்கு ஒத்ததாகும். அறிவின் வளர்ச்சிக்குத் தொழில் கட்டாயம் வேண்டும். தொழில் உள்ளபோது அறிவின் ஏற்றத்தாழ்வும் அதனுல் அறிவின் வளர்ச்சிக்குக் காரணமாகவும் இருக்கிறது. அறிவின் அனுபோகப் பெருக்கே மனிதனின் முடிவாக இருப்பதால் அறிவின் பல நிலைகளுக்கேற்ப தொழிலின் ஏற்றத்தாழ்வும் அவசியமே. உண்டு, உறங்கி அனுபவிக்கும் சுகத்திற்கு மேற்பட்ட நிலையை அறியவேண்டிய ஏக்கமும் அவசியமே.

**112.** உழைப்பில்லா சரீரமும்,
ஆராய்ச்சி இல்லா அறிவும்,
உணர்வு இல்லா உண்மையும்,
குற்றமில்லா தண்டனைக்குடையோர் போன்றே.

**113.** ஆத்மாவின் நிலை எல்லா மக்களுக்கும் ஒன்றே. ஆனல் அவ்வெல்லோரின் அறிவின் நிலையோ அறிய முற்

படுவதிலும், அனுபவத்திலும் சமமாகாது. அறிவறிந்த தன் பின் அறிவின் பாகுபாடு அறிந்தோர், எல்லா அறிவும் சமமென்றே சொல்லி அன்பு பாராட்டி அவரவர்களின் அறிவுக்குத்தக்கவாறு போதித்து வருவார்கள். அறிவறிந் தோர்க்கு எல்லாம் சமமே. சமமென்ற சொல்வன்மை யின் பலன் எல்லா அறிவும் மேல்நோக்கி வருவதற்கே. அறிவின் பாகுபாடு இல்லாதுபோனல் ஒரு ஆற்றலும் இல்லை. உலக நிர்வாகமும் இல்லை.

*114.* பெரும் அறிவுடையோரின் அன்பின் பெருக் கால் அப்பெரியோர்களின் ரூபமோ ஞாபகமோ மக்களிடம் இருந்து வருகிறது. அப்பெரியோரிடமோ மக்களின் ரூபங் களும் ஞாபகங்களும் இருந்து வருகின்றன. மக்களின் ஏக்கம் பெரியோரிடமிருக்கும்நலனைக்கருதிபெரியோரின் ஏக்கமோ மக்களின் அறிவுவளர்ச்சிக்கு. இவ்விரண்டின் தொங் கத்தால் அறிவு மேல் நிலை சென்று கொண்டே வருகிறது, இதிலும் கால அளவில் குறைவுகளை நிவர்த்தி செய்து மேல் நிலைக்குக் கொண்டு வருவதற்காக வேண்டி. இப்பெரி யோர்கள் சில சட்ட திட்டங்களை ஏற்படுத்துவதுண்டு. இச்சட்ட திட்டங்களின் கருத்து, அவனவன் சுயேச்சை யின் தன்மை அடைந்து கொள்வதற்கே. பெரியோர்களின் அன்பின் பரவசத்தில் மக்கள் அவரவர்களின் சுயேச்சை யான குணங்களை நடை யுடை பாவனையில் வெளியீடாய்க் காண்பித்து விடுகின்றனர், அப்போது அதில் நன்மைக்கு ஆளாவோரை அறிந்து கொள்வது சுலபமாகிறது, மன்றி குருக்களின் அன்பில் பதிந்து, அவ்வன்பின் பரவசம் அறி யாத மக்களின் அறிவின் சீர் திருத்தத்திற்கே, சில சட்ட திட்டங்கள் ஏற்படுகின்றன. இச்சட்ட திட்டங்களினுல் நல்லறிவுக்கு ஆளாவோர் அநேகர்.

*115.* உலக ராஜாங்க நிர்வாகம் பெரும் போக்கா யிருந்தால் ஜனங்களுக்கு அவரவர்களுடைய சுயேச்சைக் குத் தக்கபடி, நிர்வாகம் நடத்த உத்திரவு கொடுத்து, அத

ஞல் ஏற்படும் நன்மைகளைப் பொதுமக்களிடை நடுவே நிர ஹித்துக் தீமைகளைத் தவிர்க்க சில சட்ட திட்டங்களையும் ஏற்படுத்துவதுண்டு மக்களின் சுயேச்சையில் விட்ட அன்பால் மக்களிட மிருக்கும் துற்குணம் பிடி படுகிறது.

*116.* குற்றம் செய்யாமலே குற்றச் சொல்வந்தால் எதிர்நாட்களில் வரும் குற்றங்களைத் தடுக்கவந்த சொல் என்று அறிந்து நன்றி பாராட்டி ஜாக்கிரதையாயிருப்பவன் அறிவாளி.

செய்த குற்றமே வெளிவந்தால் மேலும் அக்குற்றம் வளராமல் தப்பித்துக் கொள்ள வந்த எச்சரிக்கை யென்று உணர்ந்து ஒப்புக் கொள்பவனும் அறிவாளி.

*117.* தான் குற்றம் செய்தோ செய்யாமலோ வரும் வார்த்தைகளைத் தன்புகழ் மான ஈனத்திற்கு அஞ்சி பொருள், மெய், பொய்சாக்ஷி சப்பிரதாயத்தால் ஜெயித்தால் அக்குற்றச் செய்கைகள் பரவுவதுமன்றி அவ்வினத்திற்கு இடமும் கொடுக்கிறது. அதுவுமின்றி உத்தமர்கள் இத்த கையவர்களுக்கு நீதி புகட்டவும் அஞ்சுகிறார்கள்.

இதற்காக வேண்டி, பஜாரியைக் காட்டிலும் விப சாரி (விலை மகள்) நல்லவள், ஏன்? அது அவளது தொழில். பஜாரியோ கற்பில் சரியாயிருந்தாலும் வாய்ச் சொல்லால் அநேகரை இம்சை செய்கிறாள்.

ஆகையால் அறிவாளிகள் தன் நடத்தையில் சரியா யிருப்பதோடு உலக மக்களிடத்தில் நடிப்பிலும் அநேக அபிப்பிராய பேதங்கள் விளையாதபடி நடக்கவேண்டும்,

நடிப்பில் சரியாயிருந்து நடத்தையில் சரியில்லாது போனால் ஒருவனை மட்டும் பாதிக்கிறது,

நடத்தையில் சரியாயிருந்து நடிப்பில் சரியில்லாது போனால் அநேக மக்களைப் பாதிக்கிறது.

## அறிவின் பிரகாசம்

*118.* பல நாடுகள் சுற்றித் திரிந்து பழகிப் பார்க்கப் பார்க்க, அநேக ஆகார கிரிகைகளால் பக்தியின் முடிவறியா—பணத்தாசையின் அளவறியா—வயதின் முடிவறியா—வந்த மனு வகையறியா—தன்னியல்பு தானறியா தத்தளிக்கும் மக்களுக்கு மேலறிவை யூட்டும் வகை எது வால்? பணத்தின் பெருக்கத்தாலேயோ! சம்பிரதாய சமர்த்தின் சொல் செய்கைத் திறமையாலேயோ !! பல வேடம் பூண்ட சந்நியாச கோலத்தாலேயோ !!! என்று யோசிக்கும் போதே—போதும்! போதும்!! இவைகளின் நிதானமறியாமல் அறிவு கெட்டு மடிந்த தெல்லாம் இம் மூன்றுலேயே. அவனவனில் உள்ளுள்ள அறிவையறிவித்து விட்டால், அவனவன், அனுபவத்தாலேயே எல்லாமுடிவும்.

*119* காய்ந்த மரத்தில் வைத்த நெருப்பைப் போன்று ஆசையற்ற உடம்பில் அறிவின் பிரகாசம்.

*120.* பல் இருக்கும் போதுள்ள ருசியைப்போல் தைரியம் இருக்கும்போதுள்ள அறிவு.

*121.* இத்துப்போகுமுன் ஆடையைப் பாதுகாத்துக் கொள்வது போல், அறிவு உள்ளபோது தன்னையறிய முற்படு.

*222.* கண்ணை இமையாது விழித்திருந்தால் அறிவிற்குச் சலனமில்லை. அறிவின் விழிப்புடையோருக்குப் பிறவிக்கு இடமில்லை.

*123.* ஓ அறிவாளியே! வியாபாரத்தில் சாதி, மதம் இல்லையே! அறிவில் சாதிமதம் ஏன்?

*124.* ஓ மனிதனே! நீ செய்த பிரகாசக் கண்ணாடியை நீயே பாதுகாத்துக் கொள்ளுகின்றாய். அறிவுள்ள மனிதனாய்ப் பிறந்து விட்டாய். அறிவின் பாதுகாப்பால் உன்னை நீ யறிய முற்பட்டுக் கொள்.

125. அறிவுடைய மனிதன் செய்த அதிகபவருடைய (Power) பல்புகளுக்கு (bulbs) அழுக்குப் படாதபடியும் அதற்கு ஒரு தீங்குப் ஏற்படாத படியும் பாதுகாப்பும் அத்துடன் இருந்து வருகிறது. அதைப்போல் மண்ணைச் சுத்தம் செய்து உயர்தரமான கண்ணாடி உற்பத்தியாக்கியபின் சிறிதும் தவறுமலும் அழுக்குப்படாதபடியும் பாதுகாத்துக் கொள்ளுகின்றாய். அநேக அறிவின் வாயிலாக மேற்கண்ட நுட்பங்களை யெல்லாம் செய்து முடிக்கும் வல்லமையுடைய பிரகாச மனிதனாய் உருவெடுத்ததைப் பற்றி யோசித்தாயானால் அறிவில் சிறிதளவும் தவறுதபடி உன்னில் உருகி உன்னை யறிய முற்பட்டு விடுவாய்.

முற்காலத்தில் நூறு வருடங்களில் அனுபவித்த காரியங்களை இக்காலத்தில் ஒரே வருடத்தில் அனுபவித்து முடிக்கின்றார்கள். அக்காலங்களில் சரீர உழைப்பால் அறிவின் அபிவிருத்தி மேன்மைக்கு வந்துள்ளது. இக்காலத்திலோ சரீரத்தில் அறிவின் உழைப்பால் அறிவின் அபிவிருத்தியும் ஆனந்தமும் மேலும் மேலும் அடைந்து வருகிறது. இக்காலத்தில் பிறந்த அறிவுடையவன் பத்து இருபது பிறவிகளில் அனுபவிக்க வேண்டியவைகளை ஒரு பிறவியில் அனுபவித்து முடிக்கின்றான். இனி இவ்வுலகில் பிறப்போர்கள் முற்கால ஆயிரவருட அனுபவங்களை ஒரு பிறவியில் அனுபவித்து முடிப்பார்கள். உதாரணம், பறக்க ஒரு வல்லமையின் நுட்பம் தெரிந்தால் அதனை விழுத்தாட்ட அதற்கும் மேல் நுட்பம் அறிந்து முடிக்கிறது. விழுத்தாட்டும் நுட்பத்திற்கு மேலே அதைத்தப்பித்துஜெயமடையும் நுட்பம் அறிந்து முடிவு கட்டுகிறது இப்படியே அறிவினுடைய தெளிவு ஏற்பட ஏற்பட மனித சரீரத்தில் அனுபவிக்க வேண்டியதை சீக்கிரத்தில் அனுபவித்து முடிக்க ஏதுவாயிருக்கின்றது. இவ்வாராய்ச்சி உலகில்

தன்னையறிய முற்படுவார்களானுல் அவர்களுடைய அறிவு பிரகாசிக்கக் காத்துக் கொண்டிருக்கிறது,

## அறிவின் ஆற்றல்

126. அறிவுடையோர்கள் சொல்லும் சொல்லைக் கிரகித்து ஒரு நிமிஷத்தில் சரி யென்று ஏற்றுக்கொள்ளும் தன்மையிருந்து வருவோர்கள் அநேக பிறவிகளின் அறிவின் ஆற்றலைப் பெருக்கிக் கொண்டவர்களேயாகும் அதற்காக வேண்டி அநேக பிறவிகளில் பெருக்கிக் கொண்டு வந்ததைப் பின்னும் அநேக பிறவிகளில் அனுபவிக்க வேண்டுமென்றதல்ல. எப்படி இந்நிமிஷத்தில் தெரிந்து கொண்டீர்களோ, அதேபோல் அநேக பிறவிகளில் அனுபவிக்கக் கூடிய தன்மை இச்சரீரத்தில் நிறைந்திருக்கிறது, அநேக பிறவிகளில் தன் அறிவைப் பெருக்கி அறிந்து கொள்ள வேண்டுமென்ற அத்தாக்ஷி ரூபமே இச்சரீரப். இச்சரீரத்தில் அறிவின் தோல்வியால் வேறு சரீரம் எடுப்பதைவிட அறிவின் ஜெயத்தால் இச்சரீரத்திலேயே அனுபவித்து முடித்துக் கொள்ள வேண்டும். விளைந்த வித்தின் ருசி அவ்வித்தை மறுபடியும் விளைவித்து அறிய வேண்டுமென்ற அவசியமே இல்லை.

127. ஒவ்வொரு விஷயமும் சொல்லும் போது அறிவில் பொருத்தமாய்த் தோன்றி சரியென்று ஆமோதித்த நிமிஷத்திலேயே யோசித்துப் பார்ப்பீர்களானுல், சரி என்று ஆமோதிக்கும் அளவு அறிவு எவ்வளவு காலம் பிறவியெடுத்தபலனுக இருக்கும். பின், அதே போல் அநேக பிறவிகளில்தான் ; அதை முடிக்க வேண்டுமென்போர் கிடைத்த அறிவை அனுபவிக்கத் தெரியாததாகும். அதை அறியும் ஆற்றல் உள்ளவர்கள் அதே உடம்பில் அனுபவித்து முடித்துக் கொள்வர்.

128. எல்லாம் அறியும் ஆற்றல் ஆறறிவு கொண்ட மனிதனில் ஆராய்ச்சியின் அறிவு நிலையில் அநேக பெரும்

நுட்பங்களும் செய்து முடிக்கக்கூடிய வல்லமை ஏற்படு கின்றது.

*129.* நுட்பமான பறக்கும் யந்திரங்களும், வல்லமையும் வேகமுள்ள அநேக யந்திரங்களும் ஆராய்ச்சியில் வெகுகாலமும் ஆராய்ச்சியில் அமைந்துள்ள பிளானில் (Plan) வெகுகாலமும் பின் ரூபத்தில் செய்து முடிக்க வெகுகாலமும் தான் நினைத்தபடி ஓட்டக் கூடியதற்கு வெகுகாலமும் ஆகி அது சரிவர ஓட்டத்தோடு அமைந்த தன்பின் அதிக இலகுவில் இதைப்போல் அநேக யந்திரங்கள் செய்து முடித்து விடலாம். அதற்கு மேல் சீர் திருத்தங்களும் எவ்வளவோ பிரிகின்றன. அதே போல் ஒரு ரூபம் மறு ரூபமாக மாறுவதற்கும் மறு ரூபத்திலிருந்து மனித ரூபமாக மாறுவதற்கும், வெகுகாலம் ஆகின்றது மனிதரூபமாகிவிட்டதின் பின், மனித இனப் பெருக்கத்திற்கும் மனித இன சீர் திருத்தத்திற்கும் அறிவினுடைய பெருக்கம் வல்லமையோடு பெருகிக் கொண்டு போகின்றதை அறியக்கூடிய, ஆற்றலும் அடையக்கூடிய ஆற்றலும் மனித வல்லமையால் உள்ளதே

*130.* ஒரு அறிவாளி செய்த ஒரு நுட்பத்தில் சிறிதளவு சுமார் லக்ஷம் ஜனங்களுக்கு வேலையாகின்றது. அந்த லக்ஷம் ஜனங்களும் பார்க்கக்கூடிய விபரங்கள் எல்லாம் நுட்பமாக யந்திரங்களால் ஒருவன் செய்து முடித்த போது அந்த ஒரு மனிதனிடத்தில் இருக்கும் அறிவின் நுட்பம் எத்தனை அறிவுகளுக்கு வேலை கொடுக்கின்றதென்பதை ஆராய்ந்தால் மனிதன் ஆறறிவுள்ளவன் தானு அல்லது அநேககோடி அறிவால் அரசாளும் மனிதீசன் தானு என்பது தெரியும். இதற்குத்தான் ஞானதாகம் கொண்டு அலைவது காரணம். அதை அறிந்து விட்டால் அவனன்றி வேறொன்றில்லவே இல்லை.

*131.* முற்காலங்களைவிட தற்காலத்திலும் வருங்காலத்திலும் அறிவுடையோர்களின் பெருக்கம் மிகமிக

அதிகமேயாகும். இதற்காகவேண்டித்தான் சித்தர் உலகம் நடைபெறுகிறது, முத்தர்பதவி அடைந்து கொள்ளுங்கள் என்று நான் அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கின்றீர்கள்.

132. உயர்ஞான சபையின் தத்துவம் அநேக யுகங்களால் ஒவ்வொன்றைப்பற்றி அதில் தெளிவேற்பட்டு அநேக தெளிவின் மூலமாய்த் தன் முடிவும் தன் தத்துவத்தினுடைய யதார்த்தங்களும் பின் ரூபா ரூபவாயிலிலும் இப்போது முடிவறிந்து விட்டது. இச்சபையின் தத்துவத்தை இவ்வுலகில் அறிவின் ஆவிருத்திக் கிடையிலேயும் அறிவை யறிய முற்படுவோர்க் கிடையிலேயும் க்ஷண நேரத்தில் அடைந்தறிந்து பரவக்கூடிய காலம் ஏதுவாய்விட்டது.

## அறிவின்வேகமும் நுட்பமும்

133. அறிவின்வேகமிருந்து நுட்பமில்லை
யேல் தோல்வி தோல்வியே.
அறிவின் வேகத்தோடு நுட்பமிருந்
தால் ஜெயம் ஜெயம்மே.

134. தனிவேகம் மட்டும் இருக்கும் பக்ஷத்தில் எதையும் திர்க்கமாக ஜெயிக்க முடியாது. நுட்பம் இருக்கும்போது கால அளவில் தன் அறிவின் வேகத்திற்கு ஏற்றவாறு நடந்தேறுவதை அறியலாம். வேகம் நுட்பம் இரண்டும் யிருக்கும் பக்ஷத்தில் ஈடொன்றும் இல்லை. இராஜாங்கங்களின் தன்மை வேகமும் நுட்பமும் உடையதா யிருந்தால் எக்காலத்திலும் தோல்வியே இல்லை. வேகமும் நுட்பமும் ஒன்றாய்க் கூடி நுட்பத்தில் அளவு மிகுந்திருப்போரே ஞானிகள். அவனை அவன் அறிவதற்கு விசுவாசத்தின் வேகமும்

அறிவின் நுட்பமும் மிகவும் அவசியம். வேகமிருந்து நுட்பமில்லையேல் சிறு தொலையில் முடிவிலா முடிவடையும். நுட்பமிருந்து வேகமில்லையேல் தான் கோரியது தான் நினைத்தவாறு முடியாது. வெகு தாமதத்தோடு நடக்கும். எதிலும் வேகத்தோடுங் கூடிய நுட்பம் அவசியம். உதாரணம், வேகத்தோடு செல்லும் விமானத்தைச் சாதுர்யமாகச் செலுத்த நுட்பம் அவசியமாவது போல்.

*135.* என் இருதய மலர்களே! அறிவறிந்த ஜீவானந்தர்களே! உங்களின் ஆசான் என்றென்றைக்கும் சோர்வில்லாதவன் அறிவின். ஆற்றல் நிரந்தரம் அறிந்தவன், வேகத்திலும்வேகமுடையவனே! நிற்க, நானோ, இதில் நீங்களோ, ஒன்ருய் நின்று நிறைந்த இடத்தில் நீங்களுமில்லை. நானுமில்லை நானே நான் சந்தோஷம். உற்சாகக் குறைவில்லாச் சொற்களை நிரப்புவோமாக! நிரப்புவீர்களாக! எங்கும் இதுவே நிரம்பும் உற்சாக சந்தோஷம்.

*136.* என் சொற்களெல்லாம் உலகத்தில் உள்ள எல்லாக் கேள்விகளுக்கும் சமாதானம் செய்த பின்பே வெளிவந்தள்ளன. ஆகையால் உன் கேள்வி எதுவானாலும் பதில் இதிலேயே இருக்கிறது. வேகமாய் அறிவாயிருந்து பொறுமையாய்ப்பார். கடலினுள் உண்டாகும். குமிழியின் வேகம் மணிக்கு சுமார் 2 மைல். அதைக் கடலில் உள்ள மீன் முதலியன தடுத்தாலும் குமிழி அழிந்துபோவதில்லை. இரண்டு மூன்று குமிழிகளாக ஆகி கடல் மேல் வெளியே வந்து, அலையோடுகலந்து சமாதானம் நிரவுகிறது. ஞானிகளின் உள்ளிருந்து உண்டாகும். சொல்லோ, நிமிஷத்திற்கு இருபதிறையிரம் மைல் வேகத்திலும் வேகமாக உதித்து உலகத்தில், ஏற்படக்கூடிய அநேககோடிக் கணக்கான கேள்விகளும், அதற்குரிய விடைகளும் அதிலேயே அடங்கி வெளியே வந்து சமாதானம் செய்கிறது.

இச் சொற்களை அவசரமில்லாமல் பார்த்து ஆலோசிப்பதே மிக நலம்,

## எல்லாம் மதியே

137. மதியே மனிதன் மதிமறந்த மனிதன்
மதிதேடும் மனிதன் மதியில் மதியாய்
அறிவோடு நிலைத்தவன் மனிதீசன்.

1. விதியென்ற விவகாரமற்ற சொல்லில்லா மக்களிடமே எல்லா ஆட்சியும்.

2. ஆசானை அடுப்பது எதற்கென்றால் விதிச் சொல்லை வேரோடு பிடுங்கி கடலிலும் விட்டிடாமல் எரிகின்ற பெரு நெருப்பிலிட்டு வெந்த சாம்பலும் இல்லாமல் அவனை அவனடைந்து அவனுவதற்கே. ஆசானை அடைந்தும் விதிச் சொல்லே விளம்புவானானால் விழுந்த இடத்தில் வித்து முளைப்பதுபோல், பிறந்து, பிறந்து பின்னும் என்மதியே அடைந்துணர்ந்து அவனில் அவனடைவான்.

3. விதியென்று சொல்லி மதிதேடும் மக்கள் மதியடைந்து கொண்டால், விதி அறியாமைச் சொல்லென்றே அறிந்து கொள்வர்.

4. அறிவை அறிய முற்படும் அறிவாளி விதியென்ற சொல் சொல்வானானால் அது வெறிபிடித்த விஷச் சொல்லேயாகும்.

6. சுழன்றுகொண்டு சுற்றிவரும் அசரப் பொருள்எல்லாம் சரத்திலிருக்கும் மதியே. அசரத்தை அறிந்ததால் அது இது எல்லாம் மதியே.

7. சிலையைப் போன்றது விதி. சிலையை எதற்காக செய்ததென்று அறியும் ஆற்றலில் எல்லாம் மதியே.

8. ஒரு சில அறிவுள்ள மக்கள் ஆராய்ந்து அறியக் கூடிய அறிவில்லாததால் விதியென்ற சொல்லைச்சொல்லி எதிலும் சமாதானம் செய்து கொள்வர்.



9. மேல்கண்ட மக்களிடம் அறிவை [illegible]வாரும், விளக்கிக் காட்டி சமாதானம் செய்வதைக்கூட விதியென்ற சொல்லின் சுருக்கத்தால் சமாதானம் செய்வதும் உண்டு.

10. எடுத்ததற்கெல்லாம் விதியென்று சொல்லி அறிவுடையோன் பேசுவானாகில் எவ்வளவு அறிவாளியாகக் கருதப்படுகிறானோ, அதற்கு அநேக மடங்கு குற்றமுடையவனாகிறான்.

11. சம்பிரதாய சமர்த்தாக விதியைத் திடமாகப் பேச முற்படும் அறிவாளி உருவத்தில் நன்றாக இருந்தும் சப்பாணியே.

12. கூர்மையான ஆயுதத்தைத் தானே செய்து தவறுதலாகத் தன்மீது பட்டபோது தன் மறதியை மறைக்க விதி யென்ற சொல்லைச் சொல்லிக் கொள்பவனும் அறிவின் குற்றமுடையோனே.

13. விசாரணையுள்ள உலகில் மதியின் குறையை மறுத்து உன்னில் நீ ஒளிந்திடாமல் உணர்ந்து உன் அறிவில் நிலைத்தாயானால் ஏகமும் உன் மதியே.

14. அடிப்பதும், அடித்த அடிக்குத் திருப்பி
அடிப்பதும் மதியே; அடித்ததை ஆமோ
தித்து உணர்வதும் மதியே; அடித்த
திலும் ஆமோதித்ததிலும்
குறைநிறைவை நிறைவிப்பதும் மதியே.

15. ஒவ்வொரு துறையிலும் அனுபோக தீர்க்க திடத்தில் உள்ளவர்களையே உலகத்தோர் நம்பி அவ

ரவர்களுக்கு வேண்டிய காரியங்களிலும், ஓட்டும் வாகனங்களிலும் கூசாது நிஷ்கள துணிவுடன் செல்ல, செய்ய முற்படுகிறார்கள்.

*16.* வாத்தியார்-வைத்தியர் - கொத்தர் - வாகன ஓட்டி-பரிபாலன நிர்வாகி-குரு.

*17.* பெரிய கப்பல் ஓட்டும் ஒருவன் ஜாக்கிரதை யில்லா மறதியில் ஏற்படும் அபாயம் அவ்வொருவனை மட்டும் பாதிக்காமல் அவனை நம்பிய எல்லாரையும் பாதித்து விடுகிறது. அவ்வொருவனின் ஜாக்கிரதை யான விழிப்பில் எல்லோரும் தாம் தாம் கோரிய இடம் சுகமாய்ச் சேருகிறார்கள். ஒருவனின் மதியால் எல்லா மதியும் சுகம். அதற்காகவேதான் அறிவின் நுட்பம் மேல் உயர்வுக்குத் தக்கவாறு, அநேக வித உத்தியோ கஸ்தர்களால் ஜாக்கிரதையாக ஒவ்வொரு பெரும் நிர்வாகங்களும் நடைபெறுகிறது. எல்லாம் மதி யுடன் இருந்தால் யாதொரு தாமதமும் அபாயமும் இல்லாமல் நினைத்த காரியங்கள் எல்லாம் சுலபமாய் நடக்கும்-நடந்தேறுகிறது. ஆகையால் வேண்டியது எது. அது எதிலும் மதியே மதி.

18. ஒருவன் வேகமாய் வண்டி ஓட்டிக் கொண்டே போகின்றான். இவ்விபரம் அறியாத ஒரு வன் குறுக்கேசென்று கொண்டிருக்கின்றான். அதைக் கண்டு மற்றொருவன் வண்டியை எங்கு அவன் மேல் ஏற்றி விடுகின்றானோ என்று பயந்து நினைக்கின்றான். பாராது சென்று கொண்டிருந்த வேக டிரைவர் திடுக் கென்று பார்த்து, காப்பாற்றிக் கொண்டான். வெகு சுலபமாக இதை ஆராய்ந்து எழுதியும் விட்டான். இவ்வளவிலும் படிப்படியாக உயர்ந்திருப்பது எது? அதுவே மதி.

19. அபாயமில்லாப் பட்டணத்தில் அணுக்க ளின் அலையின் வெப்பால் பூமியின் சூட்டால் பூகம்பம் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் ஏற்படும் என்று கண்டு பிடிக்கும் கருவி அநேக மக்களை அபாயத்தி னின்றும் நீக்கும் எச்சரிக்கை செய்கிறது.

20. கப்பலோ நிம்மதியான சுகத்தில் வேகமாய் ஓடிக் கொண்டிருக்கிறது. மேல் மதியால் செய்த கருவியோ இத்தனை மைலுக்கப்பால் சூறுவளிக் காற்று வருவதை அறிவித்துக் கொண்டிருக்கிறது. கப்பல் ஓட்டும் தலைவனோ தன் சுகத்தில் மறந்திராது அதைக் கண்டு (கருவியின் மேலுள்ள குற்றமோ) காற்று வருவது நிசமோ என்றறிந்து அவ்வபாயத்தி லிருந்து காப்பாற்றிக் கொள்ளும் தன்மை ஏற்பட்டு விடுகிறது

21. ஓ! படி ஏறுகின்றவனே! முன்னும் பின்னும் பார்த்து ஏறு சலனமுமில்லை. அபாயமுமில்லை.

22. வறுமைக்கும் ஏழ்மைக்கும் காரணம் என்ன? பணமுடையோர்-மேல் அறிவுடையோர் இவ்விருவர்களின் நிர்வாக நீதி குறைவாலேயே.

23. வாங்கிய கடன் கொடுக்க இயல்பு இல்லாத வனை மானபிமான கீழ் தண்டனைக்குள்ளாக்கும் நிய தியோடு சேகரித்து செலவில்லா வைத்திருக்கும் பொருள், நீதியான தொழிலில் நிரவிவர நிர்வாகம்வேண்டும்.

24. களவு கண்டுபிடித்துத் தண்டனைக்குள்ளாக்குவ தோடு பசி பிணி இல்லாத் தொழில் கொடுத்து நிரவுதல் வேண்டும்.

25. என்றென்றைக்கு இவ்விராஜாங்கமே இருக்க வேண்டும். ஒவ்வொரு தேச மாகாணங்களில் உள்ள

விளை பொருளும், பணமும், அறிவு பாகு பாடுக் கிணங்க நிரவி, பட்டினி என்ற சொல் காதில் புகாது. நிர்வகிக்க வேண்டும்.

26. எல்லா ஒவ்வொரு கட்சித் தலைவரும் என்னை, வந்து அவசியம் சந்தித்தே திர வேண்டும். சந்தித்தீர்களானுல் எல்லோரும்ஜயமடைவீர்கள். தோல்வியடைந்த கட்சிகளெல்லாம் இதோ வேகமாய் ஜெயமடைய, நுட்பத்தோடு பாடுபட்டு முற்பட்டுக்கொண் டிருக்கின்றன. தோல்வி, ஜெயம், இருக்கும் வரையிலும் என்றென்றைக்கும் இவ்வுலக மக்கள்கள் நிம்மதியடைந்ததாடில்லை.

எல்லாக் கொள்கையும், நீதி வழிபுடன் நிரவியிருப்பின் எப்போதும், சமாதானமாய் குறையின்றி வாழ முடியும். ஒவ்வொரு மனிதனுக்கும் இவ்வுலகம் சொந்தமே.

சந்தோஷம்.

## ஒவ்வொருவருக்கும் சிந்தனை

27. சொன்னதையே சொல்கிறேன் என்று நினையாது மேலும் சொல்லுகின்றேன் சிந்தியுங்கள்.

இவ்வுலகங்களாய் நிறைந்து மனித உருவமாகி மனிதனின் அறிவு பெருக்கமாக வெகு கால யுகங்கள் ஆகியது. மனித பெருக்கால் அவனவனின் சுயேச்சையான அனுபவங்களை அனுபவிக்க தடையேற்பட்ட போது அத் தடைகளைத் தகர்த்தெரிய எல்லோருக்கும் நிரவி நிர்வகிக்க தெரிய அறிவில்லா அக் காலத்திலருந்து, அறிவு பெருக்க இக் காலம் வரையிலும் ஏற்பட்ட பேதங்கள் எது? எது?

அது:—துரிதம், துன்பம், தணிவு—கொலை, களவு குரோதம்—தோல்வி, சோர்வு, மரணம்—உபகாரம், அபகாரம், விவகாரம்—விபசாரம், உபசாரம், பிரசாரம்—

வறுமை, பொருமை, பெருமை—இறக்கம், உருக்கம், இரக்கம், கெஞ்சல். கேட்டல், தயாளம்—தொழில், வியாபாரம், நுட்பம்—பொய், மெய், சப்பிரதாயம், வைத்தியம் விவாதம், வைதிகம், வயோதிகம்—ஏழை, சேகரித்தல், சேர்த்தல், தனவந்தர்—உழைப்பு, படிப்பு, வெறுப்பு—பக்தி. யோக, ஞான தவங்கள்—வேத, மத, போத பேதங்கள் அறிவாளி, அரசர், ஞானிகள் என்ற அநேக விதமான நிர்வாகங்கள் ஏற்பட்டு விட்டன. ஏன், எதற்காக வேண்டி? பசிநீக்கி தன் சரீர அனுபவங்களைச் சரிவர அனுபவிப்பதற்காக வேண்டியே.

28. அறிவு இல்லாத காலங்களில் இந்தநீதி அநீதியால் ஏற்பட்ட நன்மை யாது? அதுவின் காரணத்தாலேயே இன்றைக்கிருக்கும் அறிவினுடைய பெரும் பெருக்கமே யாகும். அதுவால், இனி மிக துரித நிதானத்தோடு இன்று ஆராய்ந்து பார்த்தீர்களானால் மேல் கண்டவைகளை எல்லாம் தாழ்த்தாது உயர்த்தியே தீரவேண்டும், ஏன்? அதுவால் அறிவின் அபிவிருத்தியாகியதால். சந்தோஷம். அவ்வறிவின் அபிவிருத்தி நுட்பம், பல சப்பிரதாயம், பொரிசு, இனப்பெருக்கம் இவை பெருகியேவிட்டது. இதை எங்கு கண்டுபிடித்து விடுவார்களோவென்று துப்பாளர் ஒவ்வொன்றிலும் ஏற்பட்டிருக்கிறார்கள். போதும் போதும் இனியாவது நீதியான நிர்வாகத்தோடு விளைந்து வந்த அநேக மனிதசமூகங்களைச் சிறு நுட்பத்தாலேயோ பெரு நுட்பத்தாலேயோ ஒரு சிறு நிமிஷத்தில் கோடி மக்களின் உயிரிழக்க வைக்கும் தந்திரங்கள் செய்யாமல், உயிர் இழக்கா தந்திரங்கள் செய்து மனித சமூகங்களெல்லாம் தன்தன் சுயேச்சை அனுபவத்தை அனுபவிக்க அறிவின் பெருக்கத்தை நிர்வாகிக்க முற்படுவீர்கள்.

## தொன்றுதொட்டு தொடர்ந்து வந்துள்ள வெகுகால யுகபெரும் பிணி எது?

29. எளிமையில் பிறந்து, வறுமையில் வளர்ந்து,
பொறுமையில் விளைந்து, சமயா சமயத்திலுணர்
அறிவில் நிறைந்து, அன்பில் நிரவி, [ந்து
அருளைப் பரப்பி, துணிவில் நிரம்பி,
பணியாத தன்னிலையை ஏகமாய்ப் பரப்பி,
எங்கும் நிரப்பினேன்.

உலகில் பெரும் பாலோருக்கு,

30. உடுத்தவோ உடையில்லை, உறங்கவோ இடமில்லை உண்ணவோ உணவில்லை. தெரிந்த தொழிலுக்கோ பொரிசு இல்லை.

31. உடுத்தியிருக்கும் அழுக்காடையால், பிறரை நெருங்கிப் பேசவோ இடமில்லை, பசிப் பிணி, பொறுமை, சரீர மெலிவால் வார்த்தைக்கோ துணிவில்லை.

என் செய்வார்கள் இது இப்படியிருக்க,

32. செக்கு புண்ணாக்காகிவிடவும், உலக்கை எண்ணையாகி விடவும் புலம்புவதுபோல், தொழில் கிடைத்து தன் தொழிலில் இருப்போர் அடிமையில்லாத் தொழில் பார்க்க வேண்டுமென்ற அலை மோதலோ நீங்கவில்லை. தன் தொழில் தான் பார்ப்பதாக நினையாத தொழிலாளியும், அநேக தொழிலாளியால், தன் பெருந் தொழில் நடப்பதாக நினையாத பெரிய தொழிலாளியான தனவந்தரும் ஒன்றுக்கொன்று இசைந்து போகும் பெருந் தன்மை தெரியவேயில்லை.

33. நீரில்லா காய்ந்த கம்மாயில் நீர் கொஞ்சமே வந்தால், அதை நம்பியிருக்கும் வெள்ளாமை நிலங்கள் குடிநீர் நிலைகள் இரண்டும் பிரயோஜனமற்றுப் போவது போல்.

பொருமையும் நிதானமும் உள்ளோராயிருந்தால் அவருக்கு வரும் வருமானமோ இரண்டுபேருக்கே காணும். பிறந்திருக்கும் குழந்தையோ ஏழு, சுற்றியிருக்கும் இன பந்துவின் மேல் இருக்கும் இரக்கச் சிந்தனையோ வேறு. மாத கிழமை சடங்கு கிரிகை கொள்கைகளின் செலவோ வேறு. இதில் எல்லோருக்கும் கிரவி வராதுபோனால், பாவி துரோகப் பாதகன் என்ற பழிச்சொல் வேறு. இதை எங்கே சொல்வது? சொன்னாலோ உயரமான வாசலில் தானே குதித்து முட்டிக்கொண்ட தலைவலியைப் போல், விதி, கர்மா என்ற குற்றச் சொல் பதிவு வேறு. இதை எல்லாம் நினைத்து ஈசனிடம் ஒப்படைத்து அழுதாலோ உடம்பிற்கு பலக் குறைவோடு உள்ளிருக்கும் கண்ணீர் சேதம் வேறு. இவையெல்லாம் குறைவில்லாமல் கிரவி வருவதற்கே இராஜாங்க அறிவின் நிர்வாகம் ஏற்பட்டது. அதற்கு மாறாக இப்படியா மறைந்து போகவேண்டும்! மீண்டும் எடுத்துச் சொல்லி விட்டேன். இனி என்றும் மறையாது பெருந் தன்மை நிர்வாகம் நிலைத்தே நிற்கும்.

34. தாய் தந்தைக்கு உள்ள கருணைக்குக் கீழ் உள்ளவர்களல்ல அரசர்களும் அரசாங்க நிர்வாகிகளும்.

35. எல்லாம் அறிந்து விட்டு விட்டு வந்த இச் சன்யாசி, இவையெல்லாம் எடுத்துக் காட்ட வேண்டியதுதான் ஏன்?

36. உலகில் இன்றிருக்கும், இனி வரும் அறிவாளிகளும் தனவந்தர்களும் எந்த நேிபாக நிர்வகிக்க வேண்டுமென்ற அவர்களின் நினைப்பின் வேக ஏக்கத்தின் விளைவே என் சொல்.

## பெரியோர்களது தன்மை

138. தடையின்றிவேகமாய்ப் போகும் வண்டியிலிருப்பவன் கண்டதற்கெல்லாம் நின்று ஆராய்வதில்லை. தூசியும்

அவனைப் பின் தொடர்வதில்லை, நினைத்த இடம் போயே சேருகிறான். அது போன்று தீர்க்கமாய் முடிவறிந்த பெரியோரின் பேச்சும் அறிவறியா மக்களின் கூப்பாடும்.

1. கடலில் கல் போட்டால் அலை தோன்றாதது போன்று அறிவுடையோருக்கு எக் கவலையும் பொருப்பில்லை.

2. அறிவால் தன்னை ஜெயிக்க முற்படுவோருக்கு மதத்துவேஷமுமில்லை. குறை உணரும் தன்மையும் உண்டு.

3. உலகிலுள்ள விபரங்களெல்லாம் தெரிந்தோர் ஒன்றையும் கண்டித்து தீர்ப்பளிக்க மாட்டார்கள். அவரைத் தெரிந்த உலகிலுள்ளோர் அதை உணர்ந்து மேல் நிலைக்கு வந்து விட்டால் அப் பெரியோர் நிலையை, அடைவார்கள். (இதனுடைய விரிவை நடந்ததெல்லாம் நன்மைக்கே என்ற அத்தியாயத்தில் அநேக மடங்கு சுருக்கிச் சொல்லியிருக்கின்றேன்).

4. அறிந்தவரின் தன்மை அறியாதது போன்றிருந்தாலும் அதனை யறியக் கூடிய தன்மை யுடையோன் தன்னை எங்கே மறைத்துக் காப்பாற்றிக் கொண்டு போகிறார் என்று உணர்ந்து அறிந்துகொண்டால் அவனே அறிவாளி.

5. பெருங் குளத்து நீர் ஊற்று வாயிலாக அநேக கிணறுகளில் நிரம்புவது போன்று பெரியோருடைய செய்கை அநேக மக்களுடைய இருதயத்தில் நிரம்பியிருக்கிறது.

6. இவ்வறிவுலகில் புதிய ஆத்மா மூன்று பிறவியில் தன் பிறவியை முடித்துக் கொள்ளவும் அறிவுடையோர், இவ்வொரே பிறவியில் எல்லாப் பிறவியையும் முடித்துக் கொள்ளவும் ஏதுவாயிருக்கும்.

7. உதாரணம்:—மரம் முளைத்துப் பூத்துக் காய்க்கு முன் அது பட்டு விட்டால், யாதொரு பிரயோஜனமுமில்

லாமல் நெருப்பிற்கும் அநேக காரியங்களுக்கும் உபயோகப்படுகிறது. அது போல் அறிவின் பெருக்கமில்லா ஆத்மாக்கள் பிறந்து அறிவின் உயர்விற்கு இடை நடுவே அநேக வேலைக்கு உதவுகின்றார்கள்.

8. விளைந்து பழுத்து ரசமாயிருக்கும் மரமாயிருப்பினும், அதை அனுபவிக்க வேண்டிய உருவமோ, மனிதனோ இல்லாதுபோனால், அதுவும் பிரயோசனமில்லாததுபோல், அறிவுடையவனாகப் பிறந்தும் அனுபவிக்கும் அனுபோகத்திற்குத் தடையிருந்து அனுபவிக்காமல் போனால் மறுபடியும் பிறந்தே தீரவேண்டும்.

9. பழ ரசத்தின் ரசிப்பை ருசிக்க அறிவுடையோர் இருப்பின் மரத்தின் ஏக்கமும் ரசிக்கும் சுவையறிவு இவ்விரண்டு இரு ஏக்கமும் முடிவடைவதுபோல் அறிவுடையவனாகப் பிறந்து எல்லாம் அறிந்து அனுபவிக்கும் தன்மைக்கு ஏதுவாயிருக்குமாகில், சரீரம் எடுத்த பலாபலனும் முடித்து சரீரம் எடுக்கா நிலையும் அறிந்து பிறவி முடிப்பார்கள். இவ் விவரம் தெரிந்தும் தெரியாமல் இருந்திருந்தால், இப்போது எடுத்துச் சொன்னதில் தெரிந்து கொண்டதால், இவ்வறிவு பெருக்கமான உலகில் அவரவர் நிலைக்கு ஏற்றவாறு நிர்வாகம் நடத்த முற்படுங்கள்.

## அறிவுடையோரின் ஏமாறுதல்

139. உலக மக்கள் அறிவாளியாகப் போற்றிவிட்டவுடன் நீ அறிவாளியாக நடந்துகொள்.

1. ஓ அறிவாளியே! உன் சலனமில்லா நிஷ்களத்தால் எல்லா அபாயங்களும் நீங்கும்.

2. முன் காலங்களில் தோன்றிய அறிவின் சித்தரிப்பாளர்கள் புகழ்ச்சியாய் எழுதியுள்ள நூலின்படி உலக மக்கள் சோதிக்க முற்படுவதும் உண்டு. பசி எடுத்தாலும் சரி, மனதின் நிர்வாகம் தன்னுள் தோன்றினாலும் சரி

தான் அறிவாளியாகவில்லை என்றும் விஷம் சாப்பிட்டுப் பார்த்தும் வேங்கை, பாம்பு, யானை இவைகளிடம் நெருங்கிப்பார்த்தும் மடிந்தார்கள். இதைப்போல் மோசம் போனவர் அநேகரில் சிலர்.

3. அறிவாளிகளின் செய்கை இதுவன்று. சமய சந்தர்ப்பங்கள் சரிவர அறிவாளிக்குக் கிடைக்கும் காலத்தில், தன் அறிவின் சலனமில்லா நிஷ்களத்தால் இதெல்லாம் நடக்கும். அச்சமய சந்தர்ப்பம் இல்லாது தானே எடுத்துக்கொள்ளும் பக்ஷத்தில் அவன் அறிவாளி ஆகான்.

4. அப்படியே நடந்தேறினாலும் அது ஒரு சிறு அறிவின் சக்தி ஒளிதலே ஆகும். அதுவே அவனைச் சிரமத்திற்காளாக்கி மடியவைக்கும். சமய சந்தர்ப்பத்தில் நிஷ்கள சக்தியின் காரணத்தால் இவ்வாறு நடந்தேறும் செயல்களைக் கொண்டு தன்னையோ பிறரையோ சோதிக்க முற்படும் மக்கள் பதர்களே. இதை அறிந்தோர் அறிவாளிகளே.

5. ஒருவன் பானத்தில் விஷம் கலந்து கொடுத்தால் பாதிக்காதே மகான்களுக்கு? அச்சோதனை உங்களைச் சோதிக்க முற்பட்டிருக்கிறார்கள். அப்படி சோதித்தால் தான் என்ன? சுவாமி என்றான் சிரித்து சந்தோஷித்துக் கொண்டு அப்பா விஷம் என்பது அறிந்தோரே மஹான், விஷம் உண்பது மகானின் தன்மையல்ல என்றேன். அறிவில்லாச் சோதிப்பில் அநேகரைக் கெடுத்துவிட்டீர்கள். தானும் கெட்டீர்கள். இதை யறியாத உலக மக்களிடம் பரவியிருக்கும் இதுபோன்ற பாதகச் செயல்களையெல்லா மறிந்த அறிவாளிகள் அதிகமாக நகர நிர்வாகிகளாக இருப்பதில்லை,

6. உலக நல்லடியார்களே! நீங்கள் ஒவ்வொன்றிலும் உணர்ந்து தேர்ந்துவந்ததன் பலனே இவ்வுடம்பில் மூக்கு, காது, கண். வாய், இவை கிடைத்து அவை

அத்தாக்ஷியாக இருந்துகொண்டிருக்கின்றன. இதை உணராது கீழ் அறிவில் நடந்து கிடைத்த கருவிகளைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள்.

## ஒரு பெரும் அறிவாளியுடன் அனேகரின் தொடர்பும், அவர்கள் கேட்கும், கேள்விகளுக்குப் பதிலும்

*140.* ஒருவன் தனக்கு தெரிந்த ஏதோ ஒரு ஊரைப் பற்றியோ, உருவத்தைப் பற்றியோ, ஒரு சமாச்சாரத்தைப் பற்றியோ அறிவாளியினிடம் கேட்டால் அவ்வறிவாளியின் அறிவு வேறு வேலைகளில் ஈடுபடாதிருக்கும் பட்சத்தில் கேட்பவனுடைய அறிவில் பதிந்திருக்கும் பதிவானது அவ்வறிவாளியிடம் பிரதிபலித்து பதில்களாக வெளிவரும்.

*1.* ஒருவர் ஏதோ சிலவற்றை கேட்கவேண்டுமென்று எண்ணி வந்து கேட்காமல் இருந்தாலும், அறிவாளிகள் வேகமாகப் பேசிக்கொண்டிருக்கும் போது அவற்றிற்குரிய பதில்கள் தானாகவே கிடைத்துவிடும். இதற்குக் காரணம் கேட்க வேண்டுமென்ற நினைப்பின் வேகமே அவ்வறிவாளிகளிடம் பிரதிபலிப்பதால்.

*2.* முற்பிறவிகளைப் பற்றிய கேள்விகளாயிருப்பின் அவையெல்லாம் அவனுக்கே தெரியாதபடி அவனுடைய ஆருதாரத்திரைகளில் அழுத்தமாக மறைந்திருப்பதால் அவன் மெய்யுணர்வு பெற்று அவனது தவக்கனலைப் பெருக்கிக் கொண்டால் அக்கனலின் பெருக்கத்தால் ஆருதாரத்தின் அறிவணுக்கள் பிரகாசமடைந்து அவன் சேதி அவனுக்கே தெரியும். இவைகள் எல்லாம் சமய சந்தர்ப்பங்களிலேயே நடக்கும்.

*3.* அறிவு சம்பந்தமான கேள்விகளுக்கும், ஞான சம்பந்தமான கேள்விகளுக்கும் அவ்வறிவாளிகள் அறி

வின் மேல்சமாதானத்தோடும் எச்சமயத்திலும் அன்புடன் பதிலளிப்பர்.

4. அநேகர் ஆமோதிக்கக்கூடிய ஒரு பெரியோரை நேரிலும், அவரை நினைத்துத்தொலை தூரத்திலிருந்து கொண்டும் பலர் பல காரியங்களைக் கோருவதுண்டு. அப்படிக் கோருகின்ற காரியங்கள் பல ஜெயமாகவே நடந்தேறும். அப்படி ஜெயமாகாவிடினும் அவர்கள் அப்பெரியோரைக் குறை கூறமாட்டார்கள். ஏனெனில் பலர் ஆமோதித்த ஒரு பெரியோரைக் குறைகூற அவர்கள் விரும்புவதில்லை. அவர்கள் தம்மையே நொந்துகொள்வர். அப்பெரியோர்களின் உயர்வே இவைகளுக்கெல்லாம் காரணம், ஆனால் பெரியோர்கள் என்று அறிவின் உண்மையில்லாதுபோனால் அந்தப் பிரஸ்தாபங்கள் சிறிது காலம்தோன்றி பின் மறைவதுடன் மற்ற பெரியோர்கள் ஜாக்கிரதையோடு நடந்துகொள்ள அவைகள் ரிக்கார்டாய் இருந்து உதவுகின்றன.

5. கொடிய வியாதிகள் பலவும் அறிவாளிகள் மீது கொண்ட முக்காலே மூன்றுவீச விசுவாசக் கனலாலும், அவ்வறிவாளிகளின் வீச அன்புக்கனலாலும் தீருகின்றன.

6. ஊமைகளுக்குப் பேச்சும், பிறவிக் குருடர்களுக்குப் பார்வையும், செவிடனுக்குக் கேள்வியும் அவ்வறிவாளிமீது அவர்கள் கொண்ட திட விசுவாசக் கனலாலும் அவ்வறிவாளிகளின் ஸ்பரிசத்தாலும், சொல் திடத்தாலும் உண்டாகின்றன.

ஒவ்வொருவருடைய எக்க வேகத்தாலேயே அநேக வாகனங்கள் ஓடுகின்றன. அவ்வாகனங்களில் பல எக்கத்தின் வரவையும் சந்திக்கக்கூடிய வேகப் போக்கும் சேர்ந்தே அவைகளில் பலர் ஏறிப் பிரயாணம் செய்கின்றனர். இத்திடமே அநேக அபாயங்கள் நேராது தடுத்துக் கொள்ளுகின்றது.

8. தொலைதூரங்களிலுள்ள இடங்களிலும், ஓடக்கூடிய வாகனங்களிலும் நடக்கக்கூடிய அசந்தர்ப்ப ஆபத்துக்களில் யாதொரு சேதா சேதங்களில்லாமல் நடப்பதற்கு ஞானிகளின் சிஷ்யர்களோ, பக்தி விஸ்வாச பற்றுதலுடையவர்களோ அப்பெரியோர்களை நினைக்கும் அறிவின் வேகத்தில் உயிருடன் இருக்கும் பெரியோர்களிடம் போய் பிரதிபலித்து இவ்விரண்டின் காரணமாக அபாயங்கள் திருகின்றன.

9. அச்க்ஷண நிஷ்கள காரணமாக அறிவு அணுக்களின் மூலம் ஏக்கத்தின் வேகம் இவையெல்லாம் செயல் புரிதலேயாகும்.

10. புகழுடையவனும், வாய்ச்சம்பிரதாய சமர்த்துடையவனும், பெரு முரடனும் அறிவாளியிடம் அண்டும்பொழுது அன்பால் ஆமோதித்துச் சேர்த்துக்கொண்டால் அவர்கள் அறிவின் உயர்வை நாடி நிற்பார்களாயின், அதற்குரிய ஆர்வத்தோடு அறிவாளிகளின் சொற்களைக் கிரஹிக்குங் கிரஹிப்பால் தம் செய்கைகள் அறிவின் நிலைக்கே கேடு விளைவிப்பதென்றறிந்து விழித்து அறிவுடையோரோடு அறிவாய்ப் பிரகாசிப்பார்கள்.
என் ஹிருதய மலர்களே!

11. அறிவாளிகளை அண்டியும் அச்செய்கைகளைவிடாதிருப்போர்களைக் கண்டித்து மேல் நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்றால் அவர்கள் மேலுள்ள அன்பால் எங்கு வராதிருந்து விடுவார்களோ என்று ஆராய்ந்து மிக நுட்பமாய்ப் பேசவேண்டி யிருக்கிறது.

12. இது கால பரியந்தம் என்வரை உலகில் அறிவை யறிய முற்பட்வர்களும், அந்நிலை அடைந்தோர்களும், தன்னிலை யடைந்து தானாகியவர்களும் மிக எளிய குடும்பங்களிற் பிறந்தோ, அல்லது பெரும் அரசர்களாயிருந்து அச்சுக அநுபோகங்களையெல்லாம்

விட்டு விட்டு ஏழைகளிலும் பெரும் ஏழையாக சரீர உழைப்பெடுத்தோ இந் நிலை யடைந்திருக்கின்றார்கள். இவ்வுண்மைகள் சரித்திரவாயிலாக இருப்பதால் ஒருவகையில் பொறுமையின் விளைவிற்கும் அறிவி னுடைய உயர்விற்கும் பயனாக இருந்திட்டாலும், மற் றொரு வகையில் அறிவை யறியக்கூடிய பக்குவிகளா யிருக்கும் அறிவாளிகள் மேற்கண்ட சரித்திரங்களை இணை வைத்துத் தன் அறிவை யறிய முற்படாது, மேற்கண்டவர்களைப் போலவே எல்லா சிரமத்தையும் எடுத்தே அறிவாளியாக வேண்டுமென்று சொல் வதைப் பார்த்தால், தொல்லையிலும் பெருந்தொல்லை யாக இருக்கின்றது. அதே சிரமத்தால் அறிவை யறிந்தது உண்மையே. ஆயினும் அறிவுடைய மக் களே! அது விளைந்து உணர்வென்று பெயரும் வந்து விட்டது. அவ்விளைவின் சுக அநுபவங்களை அநு பவிக்க முற்பட்டுக்கொள்ளுங்கள்.

1. அனுபவம் முந்தினது வேதம் பிந்தியது. அனு பவம் ஒன்றை அநேக உதாரண வாயிலாக எடுத்துக் காட்டிச் சொல்லும் சொல்லே வேதம்.

2. அனுபவத்தில் வந்தால் வேதம் சிறியது, அனுஷ்டிக்கும் முன் வேதம் பெரியது.

## பொது ஸ்தாபனங்கள்

142. ஒரு பொது ஸ்தாபனம் தோன்றும்போது எல்லா மக்களையும் சமமாகப் பாவித்தே தோன்றுகின் றது. நாளடைவில் அறிவுடையோர்களும், புகழுடையவர் களும், பணமுடையோர்களும் ஒன்றுகூடி நிர்வாகம் செய் யும்போது ஏழை ஏழையாகவும், அறிவறியான் அறிவறி யானாகவும், பணக்காரன் பணக்காரனாகவும், புகழுடை

யோன் புகழ்ச் சொல்லோடுமே நின்று இதுவரை வந்துள்ளது. இனியாவது அவ்வேழைகளுக்குத் தொழிலின் மேன்மையும் அறிவறியார்களுக்கு அறிவின் மேல் நிலையும் புகழுடையவர்களுக்கு அநுபவமும் கொடுக்க வேண்டியது அதிற் சேர்ந்த அறிவாளிகளின் முக்கிய நிர்வாகக் கடமை.

143. உலக நல்லடியார்களே! மோக்ஷ முத்தியை விரும்பிய மக்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் $\frac{15}{16}$ பங்கு பசிப் பிணியைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும் அத்துடன் $\frac{1}{16}$ பங்கு அன்பறிவாய் நிரவியிருக்க வேண்டும் என்பதற்காகவும் சேர்கின்றனர். பொது சொத்தில் அந்நீதிப் பொது ஸ்தாபனங்களுக்குள்ள முக்கிய செலவு போக மீதித் தொகைகளை அவர்களுக்குத் தொழில் தந்தே காப்பாற்றுங்கள். அவர்களுடைய குழந்தைகளுக்கும் தொழில் படிப்பு ஆராய்ச்சி தந்து காப்பாற்றுங்கள். தன் சரீர அநுபவ சுகங்களை அநுபவிக்காதபடியும் தன் சுய அறிவால் அறியாதபடியும் விரும்பும் மோக்ஷ முத்தி எதைப்போன்றென்றால் சித்திரங்களில் பார்த்த தேசங்களைப் போன்றே.

## அறிவாளிகளின் வழுக்குதலால் உலக மக்களின் ஏமாற்றம்

144. கூன் குருடு செவிடு ஊமைக்கு உள்ள சாமர்த்திய யூகயுக்தி யோசனைக்கும் கீழே ஆராய்ச்சியில்லா வணக்கம்.

145. ஓ அறிவாளிகளே! நீங்கள் பெரும்பேரும் புகழும் பெற்றுக்கொண்டது பற்றி மிக சந்தோஷமடைகின்றேன். உங்கள் சிறு வணக்கங்களால் உலக

மக்கள் ஏமாற்றமடைந்து அநேக பிறவிக்காளாகின்றனர்.

146. படித்த படிப்பின் பலனறியா மக்களே! படிப்பின் முதிர்வால் படித்தபடிப்பெல்லாம் பாழாக்கி விடாதீர்கள். எப்படிப்பும் கருத்தொன்றை வைத்தே விளைந்துவந்துள்ளது. பெரும் படிப்பாளிகளிற் சிலர் ஒன்றை வைத்து வணங்க முற்பட்டு விடுகின்றனர். முற்பட்டதின் போக்கோ மற்றவர்களைச் சிறு பாலர் பாடம் படிக்க வைத்ததுமன்றி விளைந்துவரும் மக்களும் அப்பாடத்தையே பின்பற்ற முற்பட்டு விடுகின்றார்கள். அறிந்த அறிவாளியோ, அறிய முற்படும் அறிவாளியோ, வணக்கங்களால் ஏற்படும் சிறு நன்மையைக் கருதி விளைத்துக் கொண்ட தீமைகள் அநேகம். உதாரணமாக எல்லை தெரியாத மக்கள் கண் கண்ட இடங்களெல்லாம் பார்க்க முற்படும்போது எதிரில் காணப்படும் உயர்ந்ததோர் கட்டிட குறிப்பொன்றை வைத்து வருவது சகஜம். அக்கட்டிடம் உயர்வு உயர்வேதான். அப்பெருங் கட்டிடம் பலக் குறைவால் இடிந்து விழுந்திட்டபோதிலும் அதில் மாண்டோர் மறு பிறவியில் தைரியசாலிகளாகப் பிறப்பதோடு, பெரும் ஜாக்கிரதையும் உலக மக்களிடம் இருந்துவருகின்றது.

147. ஓ பெரியோர்களே! உங்களின் தவறுதலான வணக்கங்களைத் தெரியாத மக்கள் அதுவே பெரியதாகக் கருதி அவற்றில் ஈடுபட்டு அப்பிறவியை வீணாய்க் கெடுத்துக்கொள்வது மன்றி அடுத்த பிறவியிலும் அறிவின் சலனத்தோடும் சபலக் கோழைத்தனத்தோடும் பிறக்கின்றனர். அறிவறிவோரின் தவறுதலால் விளையும் தாழ்வுதான் என்னென்று சொல்

வது? இணைப்பிரியான் அறிவாளியாவான் இணையறிந்தோன் இறைவனாவான். பெரும் கட்டிடம் உறுதியாக இருந்தால் அண்டியவர்களுக்கு அபாயமின்றியும் நாடிவருபவர்கள் கோரிய எல்லையை யடைந்தும் நன்மையாகச் சுகம் கொள்வதுபோல் சமத்துவ திட அறிவின் மேன்மையையுடைய பெரியோரை யண்டிய மக்கள் அறிவுக்கு அபாயமில்லாது உயர்வான உண்மையையே அறிந்து பயனடைவார்கள். ஆகையால் பெரியோர் என்போர் யாரோ அவர் சிறு வணக்கங்களை விட்டே தொலையுங்கள்.

148. மண்ணில் மரம் தோன்றியதே அது கீழ் தாழ முற்படுவதில்லை. மனித உடம்பில் அறிவின் வளர்ச்சியை விட்டு கீழ் நிலைக்கு முற்படாதீர்கள்.

149. கீழினத்தில் பிறந்தவன் மேலினத்திற்கு வந்து தன்னினத்தைத் தாழ்த்துபவனும் மேலினத்தில் பிறந்து தன்னினத்தைப் பெரிதாகப் போற்றுபவனும் அறிவாளியாகான்.

150. அறிவிருந்தும் தர்க்கம் செய்வது பணமிருந்தும் பிச்சை எடுப்பது போன்று.

151. அறிவின் நயவஞ்சக வல்லமைக்கே பிறவி.

152. எதார்த்த அறிவாளிகளுக்குள்ள எதிர்ப்பு கண்ணாடியில் பூசிய ரசம் போன்று.

153. இவையெல்லாம் நான் அறிய முற்பட்டு அழுத கண்ணீர் கடல்நீராகப் பெருகியிருக்கின்றது. இவையெல்லாம் அறிந்த ஆனந்தக் கண்ணீரே மழை நீராகப் பெய்கின்றது. உதாரணம்: உங்கள் கண்ணீரின் சுவை உப்பாயும் உங்கள் அமிர்தம் தித்திப்பாயும் இருக்கின்றது; உருக்கங் கொள்ளுங்கள் உண்மை யறிவீர்கள்.

## வணங்குவானேன் ?

**154. பிறப்பதற்கா? பிறந்ததை அறிந்து பிறவா நிலை அடைவதற்கா ?**

1. உலகில் ஆகார உடை பிணி இவைகளுக்காக எடுத்துக்கொண்ட சிந்தனையான ஆராய்ச்சியோ எவ்வளவோ துறைகளும் சம்பிரதாயங்களுமாகப் பெருகி விட்டது.

2. அநேக நுட்ப நூதன தொழில் வியாபார அரசாங்கம் செய்தும் ஆசைக்கோரளவில்லாமல் அலைந்தலைந்து திரிந்தலுத்து ஓய்ந்து தளர்ந்து பரிதபித்து நிதானம் தெரியாது வருந்தி மாண்டு மாண்டு மீண்டதும் போதாமல் மேலும் தன்னைத்தான் தெரியாமல் மாளுவதற்கோ ?

3. உடல் பசிக்கு உணவைப் பங்கிட்டு நிரவுதல் இல்லாததால் பசி வருத்தம் தாங்காது அனேகரிடத்தில் இணக்கமாய் இணங்கி வாயிமுந்து திர கௌரவச் சொல்லூட்டி கெஞ்சுதலின் கெஞ்சுதலால் அம்மா அப்பா அரசேயென்று வயிற்றை நிரப்ப எடுத்த முயற்சியே அநேக தர்ம சத்திரங்களாக நிரம்பியது போதாதோ?

4. நோய் பிணிகளால் உள்வருந்தும் பரிதாப சப்தத்தைச் சகிக்க முடியாமல் ஏன் இதுவெல்லாம்? எதுவால் என்று மற்ற அநேகர் எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியால் அவ்வபாயங்களைத் தடுத்துக் கொள்ள அநேக வைத்திய சிகிச்சை சாலைகள் நிரம்பியது போதாதோ ?

5. தான் வேறு ஈசன் வேறாக நினைத்து அருள் வடிவே எங்கும் நிறைந்த நீதி வடிவே எனக்கருள் புரிவாய் என்று பல பலவிதங்களாக வர்ணித்ததே அநேக வேதங்களாகவும் தேவாலயங்களாகவும் நிறைந்திருப்பதும் போதாதோ ?

6. இதெற்கெல்லாம் மேலாக தான் யார்? எதற்காகப் பிறந்தோப்? எங்கிருந்தோம்? வந்திருப்பது எங்கே? நம் முடிவுதான் என்ன? என்ற பெரும் சிந்தனையான ஆராய்ச்சியே வணக்கம்.

7. பிறப்பது அனுபவிக்க,
பின், அறிந்து அனுபவிக்க,
அறிவால், தன்னைத்தான் அறிந்துகொள்வதற்கே.

## ஞானம் தேடுவோர்

155. ஒரு பட்டணம் போகவேண்டுமென்று மூற்பட்டோர் அநேகர். போகவேண்டுமென்று பட்டணத்தைப் போற்றிக் கொள்பவர்களும், இன்றே புறப்பட்டு விட்டேன் என்று சொல்லிக் கொள்பவர்களும் புறப்பட்டுக் கொண்டதற்குத் தனிவேஷம் கொள்பவர்களும் அப்பட்டணத்திற்குப் போகாமல் அநேகர் போயிருப்பதாகப் பறைசாற்றிக் கொள்பவர்களும் காலில் சக்தியில்லாமலும் கையில் பணமில்லாமலும் நடப்போர்களும் நடக்கும் போது ஏதாவது ஒரு தோற்றம் தெரிந்தால் அது பற்றிக் கொண்டு விடுமோ என்று கண்ணைக் கட்டிக்கொண்டு நடப்பவர்களும் கண்ணைத் திறந்ததின்பின் இடையிலுள்ள அதிசயத்தை யறியாமல் வந்துவிட்டோமே என்று திரும்புவோர்களும் தான் நடந்துபோன ஒரு மைல் தூரத்தையே வர்ணித்துக் கொண்டு நிற்பவர்களும் போகும் போது தெரியாதவர்களைக் கேட்டுப் போன வழியில் திரும்பி பல சுழல்களில் சுற்றுபவர்களும் நான் பட்டணம் போக மூற்பட்டுக் கொண்டேன் என்று சொல்லளவில் சொல்லிப் பெரிய வேஷம் போட்டுக் கொள்பவர்களும் அப்பட்டணம் போயடைந்தும் அதைச் சுற்றிப் பார்க்காதவர்களும் அப்பட்டணம் அதுதானு என்ற சந்தேகத்தோடு இருப்பவர்களும் அநேகர். அப்பட்டணத்தை அடைந்து அவ்வூரி

னுடைய அனுபவங்கள் எல்லாம் அனுபவித்தவர்கள் அநேகரில் சிலர். இதைப் போன்றே உலகத்திலுள்ள ஞானம் தேடும் வேஷங்களும் சொல்லின் பரப்புதலும் அவர்கள் எங்கெங்கே நின்று கத்துகின்றார்களோ அக் கத்தலுக்குக் கட்டுப்பட்டு ஜனங்கள் பின்பற்றுதலு முண்டு.

பக்தர்கள்

156. பக்தியின் வேகத்தால் சுவை அறிவது இல்லை. சுவை பாரா பசிதீர்த்துக் கொள்வர். சுவை தெரிந்தும் பெருமையின் விளைவுக்கு எதையும் சுவை விரும்பா சம தானத்துடன் உண்பார்கள்.

யோகிகள்

2. ஒருவேளை குறித்த ஆகாரத்தை மட்டும் சாப் பிட்டு ஆசையை அடக்கிக் கொள்வர்.

அறிவாளிகள்

3. இவ்விரண்டின் விளைவால் எதையும் நிதான மாயும் சுத்தமாயும் மேல் ருசியை கிரகித்தே சாப்பிடுவர்.

4. அவர் யார் நீ யார் நான் யார் என்ற ஆலோசனை பிரச்சனையே தொழுதல் வணங்குதல் ஆலயங்கள்.

5. ஒவ்வொன்றும் சுலபமாய் வேகமாய் சுருக்காய் தெளிவாய் நீதியுடன் சுகமாய் அனுபவிக்கவே தொழில், படிப்பு, ஆராயச்சி, ஆலயங்கள்.

157. வெகுகால பக்தி யோகத்தால் அறிவின் தெளிவு ஏற்படுகிறது. அநேக ஜெபதபங்கள் செய்தாலும் தன் அறிவினுடைய தெளிவு இல்லாது ஒன்றும் பிரயோ ஜனமில்லை. ஆயிர வருஷ பக்தியைவிட அரை நாழிகை ஆராய்ச்சியேமேல். ஆகையால் அறிவின் பெருக்கத்தோடு தன்னைத்தான் அறிய மூற்படுங்கள். படிப்பு, வணக்கத்

திற்கு நீங்கள் கருவிகளாகி விடாமல் படிப்பையும் வணக்கத்தையும் கருவிகளாக வைத்து அறிவை அபிவிருத்தி செய்து கொள்ளுங்கள்.

## பக்தி

ஓ பாலர்களே! எதையும் ஈசனாய் வணங்கி வாலிபர்களாகிக் கொள்ளுங்கள்.

ஓ வாலிபர்களே! பலதையும் வணங்கி பாலர்களாகி விடாதிர்கள்.

சரீர உழைப்பிற்கு நித்திரை அவசியம் போன்று அறிவின் நிலை அறிவதற்கு பக்தி அவசியமே.

ஓ பக்தர்களே! உங்கள் பெரும் தூக்கத்தை விட்டு எழுந்திருங்கள்.

## பக்தியில் நன்மை தீமை

158. பக்தியில் எவ்வளவு தீவிரமாய் இருக்கின்றூர்களோ அத்தீவிரத்தால் தைரிய துவேஷமில்லா அன்பின் புருஷர்களாய் இருந்தால் அறிவாளியாகி ஞானியாவார்கள். அதுவன்றி பக்தியில் வரும் அவ்வவ் மதக் கிரியைகளைச் சரிவர செய்திருந்த போதிலும், ஆனந்தம் அமைதியோடு துணிவில்லா திருந்தால் அநேக வியாதிகளும் கவலைகளும் சந்தர்ப்பமில்லா சம்பவங்களும் நடந்திடவும் செய்யலாம். அத்துடன் பிறர் துவேஷமிருந்து வணங்குவோர்களுக்குச் சிறிதளவாவது அவ்வணக்கத்தின் பலன் கிடைக்காததுமல்லாமல் அவர் செய்த வணக்கங்களுக்குமேல் அதிகமாக அநேக இன்னல்கள் செய்யவும் முற்படுவார்கள். தன் கிரியை முறைப்படி சரிவர செய்துவந்து சாந்தம் அதிகரித்திருந்தால் தைரியக் குறைவின் காரணமாக இரத்தக் குறைவு ஏற்பட்டு விடுகிறபடியால் அதன்

காரணமாகக் கொடிய வியாதி அணுக்கள் குடியேறி அநேக வியாதிகள் உண்டாகின்றன. மனிதனே நல்லவன், வணக்கத்தில் தவருதவன், வணக்கத்தின் காரணமோ தன் சுயேச்சையும், அறிவின் பெருக்கமும், திட சித்தமும் பெறவேண்டுமென்ற இச்சையே. அது பெருததனல் மேற்கண்டவை நடைபெறுகின்றன. இதுவுமன்றி உலக மக்கள் இவர்களையும் சிறிது இம்சித்துப் பார்ப்பார்கள். பரம்பரைக் கிரியைகளால் பாடுபட்டதின் பலன் தைரியம் இருக்கவேண்டும். அநேக குற்றங்கள் செய்து தைரியசாலியா யிருந்தாலும் அவன் குற்றவாளியே. அக்குற்றத்தைத்தானே உணர்ந்து கொண்டாலும் சரி பெரியோர்களிடம் சென்று உணர்ந்துகொண்டாலும் சரி, இவனே குற்றத்தினின்றும் தப்பித்த மனிதன். அதுமுதல் குற்றமே செய்யாமலிருப்பதோடு முன் செய்த குற்றத்தை நினையாதிருப்பதுவே மேல் நிலையாகும். அக்குற்றத்தையே நினைத்து நினைத்து வருந்திக்கொண்டே இருப்பானகில் உணர்ந்த பலன் கிடைக்காது; பலதும் பின்தொடர ஆரம்பிக்கும்.

பரம்பரைக் குடும்பத்தைச் சேர்ந்த நல்ல மனிதன் என்று உலகமக்கள் புகழும்புகழை நம்பி தெய்வ வணக்கத்தில் தைரியத்தை விட்டுவிடாதே.

பெரும் விடுதியின் சோலையில் இருக்கும் கள்ளிப் பாலை பசும் பால் என்று நம்பி விஷத்தை உண்ணுதே.

முள் மரங்களோடு வளர்ந்த பலாச்சுளையை முள்ளுக்கு அஞ்சி தித்திப்பை விட்டிடாதே.

புகழை நம்பி அறிவை அடிமைப்படுத்தாதே.

கிரமத்திற்கன்றி சத்தியத்தை விட்டிடாதே. துற்குணத்தின் சேட்டையெல்லாம் துரும்பைப்போல் எரித்தால், நற்குணத்தின் விளைவு நவரத்தினத்திற்கு மேல்.

## 87. பிறவியின் பாகுபாடு

**159.** சரீர உழைப்பால் நாள் முழுவதும் வண்டியிழுத்து அதனால் கிடைக்கும் கூலியைப்பெற்று வேண்டிய ஆகாரம் ஏதும் உண்டு கவலையின்றி சிந்தனையில்லாமல் தூங்குகிறவன் முன் பிறவியில் குற்றம் செய்தவன் அல்ல; உண்டு அநுபவித்து மறுபிறவியில் அறிவாளியாக வருபவனே.

**1.** அந்த வண்டியிழுப்பிலேயே கஷ்டத்தையுணர்ந்து மேல் நிலையிலுள்ளவர்களைப் பார்த்து உருக்கப்படுவோன் முன் பிறவியில் அறிவாளியாக இருந்தும் தான் செய்த குற்றத்தை அநுபவிக்கப் பிறந்தவன். கஷ்டமும் எளிமையுமான அத்தொழிலில் இருந்து அறிவின் முன்னேற்றம் முயற்சி இவைகளினால் தொழிலின் மேன்மை யடைந்து முன் இருந்த நிலைமையையும் மறந்திடாமல் அறிவின் அபிவிருத்தியடைந்து தன்னையுணர்ந்து ஆனந்தமடைபவனே பெரும் அறிவாளி.

**2.** சத் விஷய சம்பந்தமான கவிகளும் பேச்சுகளும் நடக்குமிடத்தில் யாருக்கு உருக்கக் கண்ணீர் வருகிறதோ அவரும், கண் விழித்து நெற்றியால் ஆராய்ந்து கொண்டிருப்பவரும், அநேக பிறவி எடுத்து அப்பிறவிகளில் தன்னை அறியும் ஆற்றல் தேடியவர்களாவார்கள்.

**3.** தற்சமயத்தில் எங்கும் எத்தொழிலிலிருந்தாலும் அதைப்பற்றி அவசியமில்லை :. நல் வித்தை எப்பூமியிலும் முளைவிப்பது போன்று.

4. மதப்பிரசாரர்களே! மக்களை மத போதனையின் மது கொடுத்து மயக்காதீர்கள். மதுவின் மறதி கொஞ்ச நேரமே. ஆராய்ச்சி இல்லா மத போதனைக்கோ, அநேக ஜன்மங்கள்.

5 வித்து விருக்ஷ வடிவாகும் வரை நீரும் நிலத்தின் ஒத்தாசையும் வேண்டியதே. விருக்ஷமாகி வித்தான பின்னும் அவ்வித ஒத்தாசைகளைக்கோரினல் மறுபடி முளைப்பதற்கே. அறிவு முதிர்ந்து பூரணப்பிரகாசம் அடையும் வரை மதக் குருவின் சட்டம் முதலியவை வேண்டியதே. அறிவின் பிரகாசத்தின் பின்னும் மேல்கண்ட சட்ட திட்டங்களைக் கருதுவோர் பிறவிக்காளாகுவோரே.

## குரு

160. அறிவாளிகள் உள்ளபோது இரங்கா அறிவு பின் அவர்களைப் போன்றவர்கள் தோன்றும்போது நீ எங்கேயோ?

1. வித்து விளைந்த ஆனந்தமே அன்பான ரசம் குடிக்கிறது. தானும் குறையவில்லை பிறரையும் நிரவச் செய்கிறது. விளைந்த வித்துவை யாரும் அதன் நீர் நிலவளப்பத்தைப்பற்றிக் கேட்பதில்லை. அதை உண்டு பசியாறுகிறார்கள். அதுபோன்று அறிவறிந்த மகான்களுக்கு மதமோ கொள்கையோ பொருட்டாகாது. அவர்களிடம் அண்டி தமக்கு வேண்டியதைப் பெற்று அடைந்துக் கொள்வதுதான் உயர்வாகும்.

2. தன்னை அறிந்தோர் அறிந்த அறிவின் சிறப்பை எல்லா லோகங்களுக்கும் பரப்பி சந்தோஷம் ஊட்டி சந்தோஷப்படுகிறது சகசம். பழமோ வாசனையைக் கொடுத்து அழைக்கிறது. என் இருதய மலர்களே! அன்பின் புன் சிரிப்பால் எல்லோரையும் அழையுங்கள்.

3. புஷ்பத்தின் அழகும் வாடையும்போலவே, படிப்பாளிகளே! உங்களின் வாசனை மிக மிக நல்லது. பசியாறமுடியாது, பசிதீர்த்துக்கொள்ள அனுபவத்திற்கு முற்படுங்கள். என் இருதயமலர்களே! என் சொல்லெல்லாம் புஷ்பத்தின் நல்ல வாசனையிலும் மிக வாசனை என்று ஏற்றுக்கொண்டதுமல்லாமல் அனுபவத்தில் பசி தீர்த்துக் கொண்டீர்கள்.

4. ஒரு பெரும் கட்டிடத்தைக் கால் அங்குல உருவப் படத்தில் பார்த்து திருப்தி அடைந்தாலும் அது நேரில் பார்த்ததின் பின்னேயே திருப்தி முடிவடைகிறது. அது போல் சொல்லால் அறிந்த உண்மை, அனுபவத்தில் வருவது.

5. தித்திப்பின் சுவையால் சொல்லின் இனிமை
அறிவின் சுவையால் தவ இனிமை
சத்தின் ஆகாரத்தால் சமத்துவச் சொல்
அறிவின் ஆகாரத்தால் அவனிலே அடைவான்.

6. குரு சொல்லால் குறை நீங்கியது
சொல் வாங்கியவன் சுயம்பாய் இரு.

7. என் இருதய மலர்களே! கடலை நீந்தி
கரையை அடைந்தீர்
உணர்வடைந்தீர் உண்மையில் இருந்து வருவீர்.

161. கடலினுள் தத்தளிக்கும் மக்களே
மேல்நோக்கி அறிவால் நீந்துங்கள்
க்ஷணத்தில் வெளியைக்கண்டு
கரையடைந்து சுகங்கொண்டு
நம் சுயபரவெளியும் அடைவீர்!

162. முந்தினவர்களைவிட பிந்தினவர்கள்
நல்லவர்கள். பிந்தினவர்களைவிட
முந்தினவர்கள் நல்லவர்கள்.

163. என்னைவிட்டுத் தொலைவிலிருப்பவர்களே! என்னில் நெருங்கியே இருக்கின்றீர்கள்.

164. என்னிடம் நெருங்கி இருந்தும் என்னை அறியாதவர்களே! என்னை விட்டு வெகு தொலைவில் விலகியே இருக்கின்றீர்கள்.

165. கரண்டோ (Current) மிக சக்தியுடையது, தொடர்பின் கயிறிருந்தால் பிரகாசிக்கும்: அது போன்று குரு சிஷ்யர்களின் அன்பின் விசுவாசத்தொடர்பு.

166. என் இருதயமலர்களே! சத்தியத்தைத்தேடும் உள்நாட்டம் எல்லோருக்குமே உண்டு. அதில் என்னிடத்திலுள்ள சத்தியத்தை நாடி அடைந்து உறைந்து சத்திய உருவமாய் நான் ஆகியதும் அது எல்லோரிடமும் உண்டு என்பதை எடுத்துக்காட்டி உரைக்க முற்பட்டபோது, அச்சத்தியத்தை நாடும் வேகத்திலுள்ள அநேகர் முதலில் என்னைச் சந்தித்துக் கிரகித்துக்கொண்டு என்னோடு சார்ந்தே இருந்தமையால் சத்தியத்தின் உண்மை, அத்தாக்ஷி சாக்ஷி ரூபங்களாய் விளங்கி உலகத்திற்கு பெரும் பயனளித்து விட்டது. என் சத்தியம் எல்லோரும் ஏற்றுக் கொண்டதே, ரூபத்தில் ஒருவனாய் இருந்தால் என்னளவில் பட்டுமே. அச்சத்தியத்திற்குரியவர்கள் அனுபோகவாயிலாக என்னோடு இணைந்துள்ளதால் உங்களைச் சத்திய ரூப சாக்ஷியாக வைத்து அநேகர் வந்து பெற்றுக் கொண்டார்கள். பெற்றுக் கொள்ளவும் போகின்றார்கள். இதற்காக வேண்டித்தான் "என்னை நாடி வந்த நீங்கள் இனி எல்லோரும் நம்மை நாடி வரும்படி ஆகிக் கொண்டீர்கள்" என்று சொல்வதுண்டு.

1. சந்தேகம் நீக்கியதும் நீங்கள். சத்தியத்தைப் பரப்பியதும் நீங்களேயாவீர். ஒரு துளி மழைநீர் சுத்தமுடையதே. அது ஒரு இடம் தங்கி மற்ற துளிகளையும் சேர்த்துக் கொண்டால் பெரும் பட்டணத்தில் உள்ள

எல்லோரும் அச்சுத்த நீரால் தடையின்றி தாகம் தீர்த்துக் கொள்ளுகிறார்கள். நானும் என்னோடு இருப்பவர்களும் கூடிய சத்தியத்தை வந்து அடைந்துக் கொள்வதற்குத் தடையே இல்லை. பிந்தினவர்கள் வந்து சேராது போனால் முந்தினவர்களுக்குள்ள மரியாதை என்ன? முந்தினவர்களில்லாது போனால் பிந்தினவர்களுக்கு அத்தாக்ஷி ரூபம் ஏது? பழம் பழுக்கபபாடுபட்டது பெரும் பயனாயிருந்தாலும், பழம் உண்டு ருசியறிவாரில்லையேல் பயன் என்ன? அதுபோல் அறிவின் முடிவடைந்தோரின் பெரும் பசியோ தான் அறிந்து அவ்வறிவை மற்றவர் தன்னைப்போல் அறிந்து அனுபவித்துக்கொண்டபோதே அப்பசி தீருகிறது.

2. எல்லாவற்றையும் அறிந்து அவரவர் சமயத்திற்கு ஏற்ற நல்லறிவு ஊட்டும் தன்மையின்றி தன் எல்லைக்குக் கட்டுப்படுத்த வேண்டுமென்ற எண்ணமுடையோரும் ஆசான் அல்ல.

3. நீதியான குருக்கள் ஒரு எல்லைக்குக் கட்டுப்படுத்தி போது நீதியில்லா குருக்களும் கட்டுப்படுத்தி, இருக்கும் அறிவையும் பாழ்படுத்தி விடுவது சகஜமாக இருக்கிறது.

4. இன்றுவரையிலும் அன்பால் வந்தவர்களுக்கு ஆக்கினைகள் கொடுத்து, அந்த ஆக்கினைக்குக் குறைபடும் போது அன்பு கொடுத்து அறிவின் நிலையைப் பாதுகாக்க வேண்டியதும் இருக்கிறது. அறிவாளி என்றே வந்திருக்கும் ஒருவனை அவன் இனத்திற்கும் புகழுக்கும் தக்கவாறு அவனுடைய குறையை எடுத்துக் காட்டி ஆக்கினையைக் கொடுக்க இடமில்லாமலும் இருக்கிறது. மக்களுடைய செய்கை தன்னைத்தான் உணர்வதாக வாயளவில் சொல்லி உண்மையில் உணராததால்தான் சமாதானம் செய்யக் கூடிய அநேக குருக்கள் வந்த காலத்தும் வாய் திறவாமல்

இருந்து கொண்டிருக்கிறார்கள். இதற்கு முடிவான நல்லோர் எதையும் நல்லதாகப் பார்த்து, பின் வந்த குறையும் இனி வரப்போகும் குறையும் நிவர்த்திக்கிறவர்கள் தான் எதிலும் சமத்துவத்தோடும் ஜாக்கிரதையோடும் இருக்க முற்படுவார்கள்.

5, நாட்டம் நன்றாயிருந்து நடத்தை சரியில்லாத போது நாட்டத்தின் வல்லமை சிறிது நடத்தையின் மூலம் மக்களின் அறிவில் ஏற்பட்ட பதிவு அதிகம். நாட்டம் நடத்தை இரண்டுமிருந்து நடிப்பில் சரியில்லாது போனால் அதிலும் குறை அநேகருள்ளத்தில் பதிந்து இவர்களுடைய நிறைவைத் தெரிய காலதாமதம் ஆகின்றது. ஒன்றுமே செய்யாத குற்றவாளியைப் பலர் குற்றவாளி என்றால் குறை வந்து விடுமோ என்று பயந்து சொல்வோரை உபகருவியாக வைத்து தான் ஜாக்கிரதையாக அவர்கள் மேல் நன்றி பாராட்டிச் செல்லும் முற்போக்குத் தடையில்லாதபடி அவர்கள் செய்ததைத் தாமதமாகக் கொள்பவர் சமாதான அறிவறிய முற்பட்டோர் ஆவர். இதற்குத் தான் தன் குற்றத்தை அடிக்கடி உணர்தல், தன் குற்றமில்லாது போனால், பிறர் குற்றமென்று சொல்வதைப் பார்த்து உணர்ந்து நடத்தல். தன் ஜோலியில் தானிருப்பவர் பிறர் குற்றம் ஏன் பார்ப்பார் ?

6. என் இருதய மலர்களே! சிறு ஆராய்ச்சிக்குக் கொடுக்கின்றேன். எல்லாவற்றையும் விட்டு என் சுய நிலைக்கு வந்து உங்களைக் கொண்டபின் நான் அடைந்த பதத்தை (நிலையை) உங்களுக்கு ஊட்டி என்னைப்போல் எல்லாவற்றையும் விட்டு சிரமங்களோடு சிரத்தை எடுத்து இப்பதம் அடைவதற்குக் கஷ்டப்படுவீர்களென்று நான் பட்டதுபோதும் உங்களை உலகத்தோடு ஒட்டியே வாழ வைத்து மேலறிவை அறிவித்துக் கொண்டுவரும்போது ஒரு சிலருடைய தற்குறைதி விவகாரங்களைப்பார்த்து,

இதையும் தூஷித்துவிட்டு வேறோரிடம் சென்று இருக்க முற்பட்டேனானல் நீங்கள் நன்மைக்கு ஆளாவது எப்போ? உங்கள் குணங்கள் நன்மையில் சேருவது எப்போ? உடல் சம்மந்தப்பட்ட இனமும், அன்பு சம்மந்தப்பட்ட மதமும், தன் கருவால் பெற்றெடுத்த குழந்தையும் சென்ற அன்று சிறிதளவாவது இருதயத்தில் வருத்தமும் கவலையும் இல்லாத பெரும் சந்தோஷமுடைய இவனுக்கு, அறிவால் ஊட்டும் உணர்வடைந்தோர் செய்யும் அன்பின் துரோகமும் அறிவின் குறையும் கண்டு அடிக்கடி அநேக மடங்கு வருத்தம் ஏற்பட வைப்பது உண்மை அடையவந்த செய்கை அல்ல. இதையும் எடுத்துச் சொல்லி விட்டேன். என் ஆக்ஞைக்கு மாருய் நடவாது நேராய் நடங்கள். நடப்பீர்கள்.

167. நிறைவாயுள்ளவன் நிறைவில் கலந்து
நிறைவாயிருப்பன்
குறை யுணர்ந்தவனும் நிறைவில் கலந்து
நிறைவாயிருப்பன்
நிறைவிலும் குறை சொல்பவன் நிறைவில் கலந்து
குறையிலேயே இருப்பன்
குறையை எடுத்துக்காட்டி நிரவாதவர் மூன்
இரண்டும் அறிந்து நிறைவாயிருப்போன்
நீதியுள்ளவனே.

168. பேறுவிலுள்ள மை க்ஷணத்தில் சாதகத்தையும் பாதகத்தையும் உண்டாக்கும். அதைப்போல் உங்கள் மனதை க்ஷணத்திற்கு க்ஷணம் மாறவிடாதபடி சாதகத்திலேயே வைத்துக்கொள்ளுங்கள்.

## குருவை அடைதல்

169. பெரியோர்களை அடைவது அநேக சுயநலத்தைக் கருதியும் இருக்கலாம். அதில் முக்கியமானது குருக்கள் சொல்லும் சொல்லை தம் சொந்த சுயநலமாய்க் கருதிபாது

காத்துக் கொண்டார்களானால் எல்லா ஜோலியும் நீதி யாய்ச் சந்தோஷமாய் முடியும்.

1. அநேக குருக்களிடம் போனதில் வெகுமதி எது வாய் இருக்க வேண்டுமானால், தனது துர்குணங்களையே போக்கி அறிவு அபிவிருத்தி அடைந்து இருக்கின்றதா என்று பார்க்கவேண்டும். அதுவன்றி தன் குற்றத்தையே வல்லமை படுத்துவதற்காக வேண்டியும் அதை ஆமோதிக் கும் குருக்களிடம் போகாதீர்கள். மெய்யுணர்வாளர் களே! இனி எந்த குருக்களையும் அடையவேண்டிய அவ சியமுமில்லை. அடையவும் கூடாது.

2. சுவாமி! என்னிடத்தில் பயப்படுகிறீர்களே! அம்மா சந்தோஷம். நான் எப்போதும் பயந்தவனே அல்ல, உலகத்தின் கண் காதையே பாதுகாக்கின்றேன். என் அறிவின் பிள்ளாய் நீ அறிந்து கொண்டாயல்லவோ.

## குருவடைந்தேமாற்றுவோர்

170. ஒரு சில கெட்ட குணமுடைய மக்கள் அநேக குருக்களை அடைந்தும் நல்ல நூல்களைப் படித் தும் குறையுடையவர்களாகவே இருக்கிறார்கள். அவர் கள் ஒவ்வொரு குருவினிடம் நாடியும் தம்முடைய கெட்ட குணங்களுக்கே உறுதி கொடுத்து கெட்ட செய்கைகளிலேயே நிற்பவர்களாவார்கள். இவர்களை உலக மக்கள் சாதாரணமாக சீக்கிரத்தில் கண்டு பிடிக்க முடியாது. பெரும் பக்தர்களையும் அநேக குருக்களையும் இவர்கள் ஏமாற்றுவார்கள். இவர்கள் சொல்லெல்லாம் பெரியோர்கள் இயற்றிய நூல்களைப் பற்றியதாகவே இருக்கும். ஆனால் அப்படிச் சொல்வ தெல்லாம் யாவரையும் ஏமாற்றுவதற்காகவே.

171. பெரியோராக வேண்டுமென்று பெரிய நூல் பார்த்தவர்களே! சிறிதும் குற்றம் செய்யாது சீராயிருங்கள்.

குருவடைந்து ஏமாந்தோர்

172. தன்னறிவில் தன்னறிவுக்கு மேலறிவு அறிந்து கொள்ளவேண்டும் என்பதே குருவடையும் நன்னோக்கம். குரு சொல்லும் விஷயங்கள் தன் அறிவிற்கு பொருத்த மானதாகவும் அறிவிற்கு எட்டாத உயர்வான விஷயங்களாயுமிருந்தால் அதை ஆராய்ந்த பிறகு அறியக் கூடியதாகவும், தன் அநுபவத்திலுள்ள நீதியான ஆராய்ச்சி அநுபவமோ படிப்போ இவைகளை நாசப் படுத்தாதபடி அதற்கு மேல் அவர் சொல்வது அநுபவத்தில் விளைந்து வரக் கூடியதாகவுமே யிருக்கவேண்டும்.

1. தன்னை யறிய முற்படும் ஞானதாக முடையோர் தான் அறிந்த அறிவை யெல்லாம் கெடுத்துக் கொள்ளப்போவதே, தற்கால அறிவின் பெருக்க உலகத்தில் தற்போதுள்ள ஞானதாகம் எனப்படும். தான் அறிந்த அறிவையும் பாழ்படுத்திக் கொள்வது மன்றி பதராக முற்படுவதே அது வாகும்.

2. முற்காலங்களில் அறிவையறிந்தோர் மிகக் குறைவு. அறிவறியா மக்களை அறிவுக்குக் கொண்டு வருவதே அக்கால அறிவாளியான சந்நியாச குருக்களின் வேலையாக இருந்து வந்தது. தற்போது சிறிது கால அளவில், அறிந்த அறிவையும் பாழ்படுத்தி மடமைக்குப் போக முற்படுவோரும் அம் மடமையைப் போதிக்க முற்படுபவரும் சந்நியாச குருக்களும் சந்நி

யாசத்திற்கு முற்பட்டவர்களும். முற்காலத்திற்கும் தற்காலத்திற்கும் வருங்காலத்திற்கும் இடையிலுள்ள சீர்திருத்த அறிவே உயர்வு.

3. அறிந்த அறிவைப் பாழ்படுத்திக் கொண்டு புதிதொன்றை விளைவிப்பது எதைப்போன்றென்றால் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துள்ள ஓர் விருக்ஷத்தை ஆணிவேரோடு பிடுங்கி எறிந்துவிட்டு அதே இடத்தில் மறு ஒரு புது வித்தை விதைப்பது போலாகும்.

உலக சீர்திருத்தத்தில் இராஜாங்கத்தின்
பொறுப்பு: உலகமக்களின் கஷ்ட நிந்தனை

173. உலக மக்கள் கடவுளை நிந்திக்கின்றார்களா? அறிவாளிகளை நிந்திக்கின்றார்களா? அதெல்லாம் இல்லை. இராஜாங்கத்தைத்தான். கடவுளாயுள்ள சக்தியை யறிந்த அறிவாளிகளின் போதனையால் உலக மக்கள் கடவுளை நிந்திப்பதைவிட அறிவாளிகளை நிந்திப்பதுதான் நீதியாக இருந்து கொண்டிருக்கிறது. அறிவின் நீதியுடையவர்கள் அந்த நீதியை எந்த விதமாக எடுத்து விளக்கிக்காட்டிய போதிலும் நிர்வாகம் அரசாங்க வாயிலாகவே நடக்கவேண்டி யிருப்பதால், அந்த நிர்வாகக் குறைபாடுகளின் காரணமாக மக்கள் வேண்டிக் கேட்கும் கேள்விகளெல்லாம் கடவுளைக் குறித்திருந்தாலும், அதன் பொறுப்பு இராஜாங்கத்தையே சேர்ந்தது.

1. இவ்வுலகத்தில் ஜனத்தொகைத் திட்டமும், அறிவின் போதனைத் திட்டமும், அறிவிற்குத்தக்க தொழில் திட்டமும், பண சம்பாதிப்பின் திட்டமும்,

வயதுக்குத்தக்கவாறு வணக்கத்தின் திட்டமும் வகுத்து நடத்த வேண்டியது அவசியம். வேலை செய்ய இயலாத அங்க ஈனமுடையவர்கள் யார் இருக்கின்றார்களோ அவர்கள், அனுபவிக்கத் தகுந்த வசதிகள் இல்லாதவர்களாயிருந்தால் அவர்கள் ஜீவியப் பொறுப்பு இராஜாங்கத்தையே பொறுத்ததாக இருக்க வேண்டும். வேலை செய்யக்கூடியவர்களாயிருந்தால் அவர்கள் வெளியில் யாசகம் செய்யவிடாதபடி அவர்களுக்குத் தொழில் கொடுத்தே தீர வேண்டும்.

## தர்மம்

174. அறிவின் ஆக்ஷி அதிகமில்லாதபோது அறிவாளிகள் தோன்றினால் அவர்களைப் போற்றியும் காப்பாற்றியும் வந்தார்கள். அறிவை அறிய முற்பட்டோர்க்கு அறிவுடையோர்கள் அநேக ஊர்களுக்குச் சென்று அறிவை ஊட்டினார்கள். இவர்களின் பசியாற்றுதலுக்காக ஏற்பட்ட பொதுநிதி என்ற ஓர் திட்டம் நாளடைவில் அறிவின் தளர்ச்சிக்குக் காரணமாக இருக்கிறது. அறிவு வளர்ச்சி பரவியபோது அறிவைத் தெரியாத மக்களும் சுலபமாகப் பசியாற்றிக் கொள்வதற்காக அதிகமாக ஏற்பட்டு சந்நியாச பிச்சை அதிகரித்தது. அறிவுடைய மக்கள் அரூபாரூபமாகவே அவர்களிடம் ஓர் அலக்ஷியமும் அசிரத்தையும் கொள்ளலானார்கள்.

தர்மத்தால் பசியாற்றிக்கொள்ள ஏற்பட்ட சந்நியாசப்பிச்சையால் பிறவி எடுத்தும் பலனறியாதவராகின்றார்கள். தர்மத்தால் பல பிறவிக்கு ஆளாக்குவதைவிட அறிவு வளர்ச்சியால் எடுத்த பிறவியிலேயே தன்னை அறிந்து கொள்ள வைப்பது மேல்.

## செல்வம்

175. புகழும் பணமும் கிடைப்பது வெகுகாலத்தின் பிரயாசையாலேயே, அதன் பயன் நீதியாய் செலவழித்து தன் நல்வழியில் அநுபவித்துக் கொள்ளுங்கள். அதே போல் புகழில், அநேக மக்களின் ஏக்கம் ஒருவரை பாதித்துக்கொண்டிருக்கிறது. அது மிக அரிது. அவ்வேக்கத்தை உபகருவியாகப்பாவித்து தான் எதிலும் நிதானித்து அறிவாளியாகிக் கொள்ளுங்கள். அப்போது மக்களும் நீங்களும் பிரயோஜனம் அடைந்து கொள்வீர்கள்.

1. நீங்கள் அறிவடைந்து கொண்டீர்கள்.

2. அவ்வுயர்வைப் பின்பற்றி மக்கள் நந்நாட்டத்திற்கு ஆளாகின்றார்கள்.

176. ஓ பணக்காரர்களே! உங்கள் பணத்தை நீங்கள் என்ன கருத்துடனே சேர்த்திருந்தபோதிலும் அதை நல்கருத்தில் அனுபவித்துக் கொள்ளுங்கள்.

எறும்பு சேர்ப்பதை எலியழிப்பதுபோல, உங்கள் பொருள் அழிந்து விடக்கூடாது.

177. நீங்கள் சம்பாதிக்கும் பணத்திற்கு ஓர் நிர்ணயிப்பை வைத்துக்கொள்ளுங்கள். தான் ஜீவிக்கும் கால அளவிற்கு ஏற்ப தன் பசியாற்றுதலுக்கு வேண்டிய அளவு பணம் சம்பாதித்துக்கொள்வது அவசியம். இத்திட்டத்தில் பணக்காரர்கள் ஏழையாவதே இல்லை.

இதைவிட அதிகமாக சம்பாதிப்பதில், சம்பாதிப்பதிலேயே காலத்தைச் செலுத்துவதன்றி அதை அனுபவிப்பது கூடுவதில்லை. சம்பாதிப்பது அப்பிறவிலேயே அனுபவிப்பதற்கா அல்லது அதன் பயன் பல பிறவிக்கு ஆளா

வதற்கா? சம்பாதித்தை அனுபவிக்காமலே இறந்தால் நீ அடுத்த பிறவியில் பிறப்பது எங்கேயோ? இதற்காக வேண்டி நான் அப்போதைக்கப்போது வேண்டிய ஆகாரத்திற்கு சிறு நிமிஷ கவலையில்லா கவலையும், நாளை என்ன செய்வதென்றதற்கு மணி நேரக்கவலையும், உடலுள்ள வரை ஆகாரச் சம்பாதனைக்கு நாட் கவலையும் இருப்பது போதும்.

இதற்கெல்லாம் மேற்கவலை கொண்டுள்ள மக்கள், உடலாயுளுக்கு மேல் உள்ள சம்பாதனைக்கு பெருங் கவலை கொண்டுள்ளார். அது வேண்டாம். எதையும் நிதானித்து சம்பாதித்துக் கொள்ளுங்கள். உங்களுடைய சரீர சுகத்தோடு சம்பாதித்த நாள் போக மீதிநாட்களில் பொது காரியங்களைக் கவனிப்பதில் நன்மையுண்டு.

(பெரிய தொழிற்சாலையில் உயர் பதவிகளை ஏற்று அத்தொகைகளைத் தொழிலாளர்களுக்குப் பங்கிடுங்கள்.)

## போதை

178. 30 வயதிற்கு மேற்பட்டவர்களே இச்சம்பந்தமான வகைகளில் பகிரங்கமாக ஈடுபடுகிறார்கள்: அவைகளால் ஏற்படும் தீங்குகளைக் கவனித்து அஞ்சுங்கள். உங்கள் அந்தஸ்து எவ்வளவுதான் பெரியதாக இருந்திட்டபோதிலும் தண்டனைக்காளாகும்போது இதுவெல்லாம் எங்கே? நீங்களே எடுத்துக்கொண்ட செய்கைகளை விலக்கும்போது மூன்றுநாள் மனக்கஷ்டம் பெரும் பொருட்பட்டதல்ல.

சிறுவர்கள் உங்களைப் பார்த்தே அப்பழக்கங்களுக்கு ஆளாகிறார்கள். இதோ உங்களைப்பார்த்து விட்டுவிட்டார்கள். ஓ வாலிபர்களே! இன்றே இப்பழக்கத்தை விட்டு விடுங்கள்: உங்களால் இவ்வுலகத்திற்கு பெரும் நன்மையை விளைவித்து விட்டீர்கள்.

கொடிய விஷ ஜந்துக்களை வளர்த்து அதுவால் மாளுவதுபோல் கெட்ட குண அனுபவத்தால் மாளாதீர்கள்.

சாமி! எல்லாம் ஏக்கம் தானே? அப்பா. ஆம். ஏக்கம் பழமாகி ரசிப்பதற்கே: காயாகி வெம்புவதற்கு அல்ல.

## சூது

179. சிறு தொகையைக் கட்டிப் பெருந்தொகையை எதிர் பார்த்து ஏங்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஏங்கிக்கொண்டிருந்த நேரமோ தன் அறிவின் சுய பிரயாசையை வீணாகக்கெடுத்துக் கொண்டீர்கள்.

1, உங்கள் உண்மை உற்சாக நீதியை விட்டு மாறிக் கொண்டீர்கள்.

2. அப்படியே ஜெயித்து விட்டீர்களானாலும், அநேகரின் தோல்வியே உங்களின் வெற்றி.

3. அவ்வெற்றியின் பரிதாபச் சொத்தால் சுகிக்கும் சுகம் சுகமா? சுகமாகாது. அச்சொத்தால் சுகிக்கும் முகமோ கருணையருள் இருக்காது.

4. உன் தோல்வியின் பரிதாபத்தைப் போலவே உன் வெற்றியில் அநேகரின் பரிதாபம் அடங்கியுள்ளது.

5. களவின் சொத்து ஒருவரை பாதிக்கிறது. சூதின் சொத்தோ பலரை பாதிக்கிறது.

6. இன்றே சூதை விட்டு விடு. சத்தியம் சொல்லி இதன் அடியில் கையொப்பமிட்டுக்கொள்.

..........................................................

7. பலன். நீ உன் குடும்பத்தோடு கவலையின்றி அறிவின் சிறப்போடு நல்வாழ்வு வாழ்வாய்.

## ஒழுக்கம்

180. மெய்யுணர்வாளர்கள் இங்குள்ள நூல்களில் உள்ள முக்கிய ஒழுக்கங்களை வீடுகளில் இயற்கையாகக்கொண்டு வரவேண்டும்.

2. அறிவடைந்தோர்க்கும், அறிவடைய முற்படுவோருக்குமே ஒழுக்கம்.

3. அறிவின் நுட்ப வேகப் போக்கே நாகரீகம். அறிவின் நுட்ப உயர்வே அழுத்தம், கனம், மரியாதை.

4. வாய்ச்சொல் இன்பத்தால் கற்பு, உருக்கம், காப்பாற்றுதல், அன்பின்பரவசம்.

5. மல ஜலவாதுகள் செய்யும்போது மிக மறைப்பு இருக்கவேண்டும்.

6. குளிக்குப்போது உடை முழங்கால் வரை மறைத்திருக்க வேண்டும்.

7, இருப்பு, நடை, படுக்கை, பார்வையில் ஒழுக்கம்.

8. தாய் தந்தை கொடுக்கும் மரியாதை குழந்தைக்கு எதுவால்?

9. எல்லாம் கூடி செல்வது எங்கே? செல்லாத இடம் எது?

10. ஆண்கள் எவ்வித நகைகளும் அணியாதிருத்தல். முப்பது வயதிற்கு மேற்பட்ட ஆண்கள் நாடகம், நடிப்பு இவைகளுக்குச் செல்லாதிருத்தல், பெண் குழந்தைகளை பத்து வயதிற்குமேல் அங்கு கூட்டிச் செல்லுவதும் கூடாது.

11. ஆசை வளர்ப்பது எதுவால்? ஆசைப்படாத இடம் எது?

12. தன் படத்தைத் தவிர்த்து மற்ற எவ்வித படங்களும் வீட்டில் இருக்கக்கூடாது.

13. ஜெபம், பூசை, வேண்டுதல், விரதமிருத்தல், சரீரத்தில் பல குறிகள் இடுதல், தாயத்து கட்டுதல், சூரிய, தீப, நாணய வணக்கம் அறவே கூடாது.

14. பேர், ஊர், சொன்னால் நன்மையே சொல்ல வேண்டும்.

15. அநேகம் கண்ணால் கண்டும், காதால் கேட்டும், வெளியிடாது காப்பாற்றுவது எது? பெரியோர்களிடம் சிறியவர்கள் சொல்லாதது எது?

16. கண்ணாடி, பீங்கான் பாத்திரத்தை உபயோகியுங்கள். அப்போது ஜாக்கிரதை யோடு ஒழுக்கச் சுத்தம் ஏற்படும்.

17. உணவு உண்போர் முன்னும், விருந்து நடக்குமிடங்களிலும் காருதல், துப்புதல், மூக்குச் சிந்துதல், அபான வாயு விடுதல் இவைகள் கூடாது. இப்படியே மற்ற இடங்களிலும் இருக்க வேண்டும்.

18. தங்கம் ஆகிய பின் துருப்புப்பிடிக்கும் என்பதில்லை. முத்தின் விளைவின் வெளிச்சத்திற்கு மறைப்பில்லை. அப்போ மேல் அழுக்குப் படாதிருக்க சபையின் ஒழுக்கம்.

181. நெருப்பு, வெப்பின் சுவாலை, அலையால் ஜனங்களுக்கு அருவருப்பு ஏற்படுவதுண்டு; நாகரிக உடைகளில் காம அலைகளைப் பரப்பாதீர்கள்.

182. நல்ல காற்றின் அலைகளின் சுகம் போன்று உயர் நடை ஒழுக்கத்தால் கௌரவ அலை நிரப்புங்கள், பரப்புங்கள்.

183. கொடிய விஷ வித்தின் மரமாயிருந்தாலும் நிழலுதவுகிறது. கொடிய குண மனிதனோ பிறருக்குக் கொடுக்கும் நன்மை என்ன?

184. தித்திப்பு இருந்தால் ஈ எறும்புக்குப் பயப் படுவதுபோன்று, அறிவுடையோர் குற்றத்திற்குப் பயப்படுவர்.

185. பரிசுத்த வெள்ளையில் அழுக்குப் பட்டால் உடனே தெரிவதுபோல, அறிவுடையோர்களுக்கு அறிவில் அழுக்குப்படு முன் உணர்ந்து கொள்வர்.

186. பரிபூரண பரஞ்சோதியின் உயர் ஞான சபை என் இருதய செல்வர்களே! செல்விகளே!

எதிலும் சீராய் சிறப்பாய் நடங்கள்.

சீர் கெட்டதில் சிறிதளவாவது தன் செருப்பைக் கூட நழுவ விடாதீர்கள்.

இவர்களே என் இருதய மலர்கள்.

நழுவ வைத்திட வேண்டுமென்று நினைப்போர் முன் செருப்பை அழுத்தி நடங்கள்.

அப்போது நீங்களும் சிறப்பாளர்களே. அவர்களும் சீராவார்கள்.

## மதம்

187. ஒவ்வொரு தத்துவத்தைப் பின் பற்றியதே மதம்.

1. ஒவ்வொரு மதத்தின் எதார்த்தத் துணிவே உயர்வான மறு ஒரு மதம்.

2. தன் மதத்தின் தத்துவத்திற்கு மேலான தத்துவத்தைக் கண்டு பிடித்து அதைப் பரப்புவது புதிய மதம்.

3. தீர்க்கமான எதார்த்த வீர திடச் சொல் செய்கை தீர்க்க தரிசிகளுக்குப் பின் சிஷ்யர்களின் விசுவாச பரவசத்தால் பரப்பியதே மதம்.

4. தன்னை யடையும் பிரயாசை வேகத்தில் தன்னறி விற்கு அச்சமயத்தில் எது திடமாகத் தோன்றுகிறதோ அதையே திடப்படுத்தி தீவிரமாகப் பரப்புவதும் ஒரு மதம்.

5. தன்மத தத்துவத்தைத் தன்னறிவில் விளக்கமாய்த் தெரிந்து கொண்டதின் பின், அம்மதத்தையே நீதியாக மறு ஒரு ஒழுக்கங்களோடு அக்காலத்திற்கேற்ப புதுப்பிப்போர் சமயாச்சாரியாவர்.

6. தான் எதார்த்தத் துணிவால் கண்டுபிடித்த தத்துவங்களையும் அவர் அறிந்த அறிவையும் உலகில் சொல்லத் துணிந்தபோது, அச்சமயத்தில் அவ்வகையில் தேடிக்கொண் டிருப்போர் ஒன்றுகூடி அனுபவிக்க எதுவாகிறது. உதாரணம்: மறைந்திருக்கும் ஒரு பெரிய வல்லவனை அநேக துப்பாளர்கள் தேடித் திரியும்போது ஒரு துப்பாளன் கண்டுபிடித்தவுடன் எல்லா துப்பாளர்களும் ஒன்றுகூடி ஆனந்தித்து கண்டுபிடித்தவன் பேரையே வைத்து அவ்வழக்கு முடிவது போன்றே முதலில் கண்டுபிடிப்போரின் பெயரை வைத்தே மறு ஒரு மதம்.

7. எல்லா தத்துவத்தையும் அறிந்து தன்னிலை யடைந்ததுவே வணக்கமில்லா சமம்.

8. தன்னை யடைவோர் எம்மதத்தில் பிறந்தாரோ அம்மத ஒழுக்கங்ளோடு அநேக பிரயாசையால் அறிவின் பெருக்கத்தால் தன்னை யடைந்து, தன் ஸ்தூலத்திலுள்ள சூக்கும காரண சரீரங்களைக் கண்டு, அதற்கு மேலறிவால் ஜோதி நாதம் இவைகளையும் கண்டு, அனுபவ வாயிலாக ஆதியோடு கலந்து அறிந்தோர், தன்னிலை யடைந்தோர்.

9. உலக நல்லடியார்களே! இதில் அனுபவமுடையவர் பெரும் சிலர். இக் கூட்டத்தின் சிறப்பை நம்பி இக் கூட்டத்தில் சேர்ந்து பின் அனுபவித்துக் கொள்பவர் சிலர். இப் பேரையும், ஒழுக்கங்களையும் மாத்திரம் பின் பற்றுவோர் அநேகர். அக்காலங்களில் அனுபவங்கள் மூன்று பரம்பரைக்கு மேலாகிவிட்டால் அனுபவமில்லாமல் அவ் வொழுக்கமும் தத்துவமும் பின்பற்றி நடக்கிறது. இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அநேக அறிவின் பாகுபாடுகளாகப் பிறப்பினும் அவ் வொழுக்கங்களையும் பேரையும் பின் பற்றியே பரவுகிறது. நாளடைவில் அறிவின் பெருக்கத்திற்கும் அனுபவத்திற்கும் மறு ஒருவர் அவ்வக் காலங்களுக்கேற்ப இருந்திருக்குமாகில் வயதளவில் அறிவின் பெருக்கத்திற்கு அனுபவ வாயிலாகக் கொடுத்தே வந்திருக்கலாம். இக்காலம் வரையிலும் அது இல்லாததால் ஒரு மதத்தின் பெருக்கம் ஆயிர மாயிரம் வருஷத்திற்குப் பின்னால் தோன்றி மறுபடியும் முன் சொன்னபடியே நடந்தேறி வந்துள்ளது. உலகில் நிறைவடைந்து குறைவுடையதாக ஆகி விடுகின்றது.

10. என் இருதய மலர்களே! இவ் விரகசியங்களைக் கண்டதால், இவ் வனுபவங்களால் குடும்ப பரம்பரையில் இருந்து வருவதற்கு 1948-ம் ஹு ஜனவரி மீ 7 உ திட்டத்தின் படி நடந்து கொள்வீர்களாக.

## விஞ்ஞானத் துறைகளின் ஆரம்பமும் முடிவும்

188. ஓ ஆராச்சியாளர்களே! உங்களை யறியாமலே நீங்கள் தன்னை யறியவேண்டு மென்று முற்பட்ட வேகமானது, அநேக நூதன விஞ்ஞானத் துறைகளைக்

கண்டுபிடித்து அவ் வொவ் வொன்றிற்கும் தனிப் பெயர் அமைத்து விட்டீர்கள். அதுவும் அவசியமே. அவ் வாராய்ச்சிகள் எல்லாவற்றிலும் உள்ளிருக்கும் தன்னை யறிய வேண்டுமென்ற ஏக்கம் பூர்த்தி யடையாததால் அவ் வாராய்ச்சிகள் நின்ற பாடுயில்லை. வெகு ஆராய்ச்சிகள் இன்றுவரை தீர்க்கமாக முடிவு கட்டாமலும் இருக்கிறது. நீங்கள் எடுத்துக்கொண்ட ஒவ் வொரு துறையும் 12-8-45 லிருந்து எல்லாம் தீர்க்கமாகவே முடித்துச் சொல்வீர்கள். நிச்சயம். அவ் வாராய்ச்சிகளின் பலனால் உங்களுக்கு வேண்டிய அறிவு நிரம்பித் ததும்பிக்கொண்டிருக்கிறது. அதே ஏக்கவேகத்தை தன்னை யறியத் திருப்பிக்கொண்டீர்களானால் க்ஷண நேரத்தில் உங்களை நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

189. அணுக்களால் ஏற்படும் அநேக அபாய கெடுதிகளைக் கண்டுபிடித்து தடுத்து வருகிறீர்கள். அவ் வணுக்களின் வேகத்தைக்கொண்டு அநேகர்களை அபாயத்துக்கும் ஆளாக்குகிறீர்கள். அவ் வணுவில் நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?

உயிர் நீங்கிய உடலை உயிர்ப்பிக்க
முடியுமா ?

190. ஜீவனுக்கு ஜீவன் அறிவு
அறிவு ஜீவன் ஜீவனே.
உயிரின் ஆற்றல் அறிவால்
அறிவின் ஆற்றல் அவ்வுயிரில்.
நினைப்பின் ஏக்கம் அறிவால்
அறிவின் ஏக்கம் நினைப்பில்.

191. விருந்தாளிகளாய்ப் போன விடங்களில் நாள திகமாகி விட்டால் விருந்தாளிக்குப் பிரயாணத்தில் துரித

மும், அனுப்புபவர்களுக்கும் அன்பு சந்தோஷத் துரிதமும் இருக்கின்றதுபோல், இப்பூவுலகில் வந்து திரும்பும்போது ஏன் இருவர்களுக்கும் சந்தோஷம் இருக்கக்கூடாது ?

பிறப்பானேன் ?

192. எவ்வளவு அதிக வயோதிகமாயினும், வருந்தும் பெரும் நோய் பிணியிருப்பினும் உயிர் உடம்பை விடச் சம்மதிக்காததேனோ ?

முன்னிருந்த சுகமறியாததாலோ, பின் அனுபவித்த அனுபவம் போதாததாலோ, எவ்வகையில் அனுபவித்து முடிப்பதென்று தெரியாததாலுமே.

193 உயிர் நீங்கிய உடலுக்கு ஜீவசக்தியைக் கொடுப்பது தொப்புள் வழியாகத்தான் கூடும். தொப்புள் நாடி அடைபட்டதன் பிறகே குழந்தை பிறக்கிறது. அது வலுவாக அடைபட்டிருப்பதால் அதைத் திறக்க முடியாது. மற்றும் கண், காது, மூக்கு, வாய், முதலிய பொறிகளின் வழியாய்ச் செலுத்தி உயிர்ப்பிக்க முடியாது. ஆதலால் உயிர் நீங்கிய உடலை உயிர்பெற வைக்க முடியாது.

194. செத்த சவத்தைப்போல் இருப்பவர்களில் அறிவின் சக்தி உடலில் எங்கே யாவது அடைபட்டிருந்தால், ஞானிகள் தொடுவதால் உண்டாகும் சூட்டினுல் அவர்களுக்குள்ளிருந்த அறிவே விழித்து உயிர் பெறுதல் கூடுமே ஒழிய, ஆத்மா வெளியேறிய பிறகு அவ்வுடலை உயிர் பெற வைக்க முடியாது.

195. செத்த பிணத்தை உயிர் பெற வைக்க முற்படுவதைவிட சாகாமலே அறிவைப் பாதுகாக்க வைப்பது மேல்.

1. ஒவ்வொருவருடைய ரூபம் தனியாயிருப்பதுபோல் அவரவருடைய ஆத்மாவும் தனி. இறந்தபோது ஆத்மா

வும் அறிவும் உடலை விட்டுப் பிரிகின்றது. திரும்பவும் அவனை உயிர் பெற வைத்தல் என்பது, அதே ஆத்மா அவ்வுடலில் வந்து சேர்ந்தால் தான் கூடும். வேறு ஒவ்வொருவனும் அவனுக்கவனாய் இருப்பதால் இறந்து பட்டவனை எழுப்புதல் வேறு ஒருவனால் சாத்திய மாகாது.

2. இறந்த ஆத்மாவே உடம்பு உள்ளே செல்ல வழியில்லாமல் ஏங்கி நிற்கிறது.

### மரணத்தைத் தடுக்க சில முறைகள்

196. மரணிக்கப்போகும் சுமார் 2½-மணிக்கு முன், உயிருடன் இருக்கும் பெரிய வௌவால் இரத்தத்தை வைத்திய முறைப்படி நரம்பில் செலுத்தினால், அவ்வுயிரை சிறிது காலம் வரை சுமார் 100-க்கு 10-பேர்களைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

1. வாலிப பருவமுடைய நல்ல உடம்பாய் இருந்தால், 5-நிமிஷத்திற்கு முன் விந்து ஸ்கலிதம் ஆகவிடாதபடி லிங்கத்தை ரப்பரினால் கட்டிவிட வேண்டும். அப்போது ஸ்கலிதம் ஆகி உயிர் நீங்காது. ஸ்கலிதம் ஆகப்போகும் உடம்பில் சூடு ஏறி காப்பாற்றிக் கொள்ளலாம்.

2. பௌர்ணமியில் இறப்போர்க்கு மரண வாதைக் குறைவு : அமாவாசையில் அதிகம்.

3. உயிர்போகும் 5-நிமிஷத்திற்கு முன் நல்ல கெட்டியான உலோகத்தால் செய்த பெட்டியில் வைத்து, அதை எவ்வகையிலும் காற்று(காஸ்)போகாதபடி பந்தோபஸ்து செய்து, அதில் ஒரு பாகத்தில் கால் அங்குல துவாரம் இருந்து அதையும் அடைத்து வைத்து மருந்து செலுத்தும் ஊசியுடன் கெட்டியான பைப்பு (pipe) அத்துடன் இணைத்து, அவ்வூசியை உயிர்போன ஒரு உடம்பின் குறுக்கு எலும்பு துவாரத்தில் வைத்து இருந்தால், பெட்டியில் உள்ளவன் உயிர்போன உடனே அவ்வுயிர் இவ்வுடலுக்கு வரும்.

## தூர சம்பவங்களறிதல்

197. ஆள்காட்டி விரலால் காதை அடைத்து இரவில் படுத்துக்கொண்டு வெகு தொலைவில் இருக்கும் தமக்குத் தெரிந்தவரைப் பற்றி நினைத்தால், அவர் அப்போது எந்நிலையில் இருக்கின்ருர் என்பது சிறிது சிறிதாகப் புலனுகும். தூரம் அதிகமானுல் மிகத்தெளிவாகத் தோன்றும். அவர் படம் இருந்தால் காதை விரலால் மூடி படத்தைக் கூர்ந்து பார்த்து எதை நினைக்கிறீர்களோ அது அவர் ஞாபகத்தில் தோன்றும்.

## கண்பாப்பா உள்ள பிறவிக் குருடன்

198. பிறவிக் குருடருக்கு இரு கண்களுக்கும் நேர் பின்பக்கம் பிடரியில் ஒரு நரம்பிருக்கிறது. அங்கு ஒரு அனு அப்பார்வை ஒளியைத் தடுத்துக் கொண்டிருக்கிறது. மின்சார சிகிச்சை மூலம் அம் மறைப்பை யகற்றி விட்டால் கண் தெரியும்.

## ஊமை

199 ஊமையாயுள்ளவர்களுக்கு உட்பக்கத்தில் சுவரொட்டி, ஈரல், பித்தாசயம் ஆகியவைகள் ஒரு சிறு ஜவ்விஞல் பிணைக்கப்பட்டிருக்கிறது. அந்த சிறு ஜவ்வு குட்டினுலேயோ, திடீரென்று பயத்திஞலேயோ விலகி விட்டால் ஊமைகள் பேச முடியும். எக்ஸ்ரே மூலமாக இதைக் கவனித்து அந்த ஜவ்வை விலக்கிவிட்டாலும் பேசுவார்கள்.

## சோதிடம்

200. முயற்சி இல்லாதவனுக்கே சாஸ்திரமும் ஜோதிடமும். இவ்வறிவுலகத்தில் பெரும் பட்டணத்தின் தெருக்களில் சகுனத்தடை இல்லாதது போன்று அறிவுடையவனுக்கு எச் சகுனத் தடைகளும் இல்லை.

1. கிரகங்கள், கடல், பௌர்ணமி இவைகளுக்கும் மனிதனுக்கும் சம்பந்த மிருக்கின்றது. கிரகங்களுக்கும் மனிதனுக்கும் தொடர்பிருந்தும் ஏன் அது அவனைப்பாதிக்காது போகலா மென்றால், அவை அறிவின் கீழ் நிலையில் உள்ளவைகளே. மேலறிவின் வேகத்தால் அக்கிரகங்களின் எண்ணங்கள் மனிதனின் மனதில் அவற்றைக் கொடுத்தும் கொடாமலும் அறிவில் சேர்ந்து கொள்ளுகின்றன. அதுவால் அறிவாளியை இவைகள் பாதிக்கிறதில்லை. அறிவாளிகள் இவைகளைப் பார்ப்பது கூடாது. அவ்வாறு பார்த்தால் அது எதைப்போன்றென்றால், நல்ல நீர் உர முள்ள நிலத்தில் கல் முள் விதைத்தது போன்றே.

2. ஓ ஜோஸியர்களே! மக்கள் இருதயத்தில் நல்லதையே பதிய வையுங்கள். அப்போது நீங்களும் நல்லவர்களே. அவர்களின் இருதயத்திலும் உற்சாக மிட நல்லறிவும் விளைவடைந்து வளர்கின்றது.

3. மெய்யுணர்வாளர்களே! நீங்கள் உங்கள் குழந்தைகளுக்கு நல்ல பெயர் வைக்கவேண்டும். சாதகங்கள் எழுதுவதோ ஜோஸியம் பார்ப்பதோ அறவே கூடாது.

4. செய்வினை சூனிய வஞ்சனை செய்பவர்களே! நீங்கள் உங்களின் சரீரத்தைக் கத்தியால் குத்தி கிழித்துப் பாருங்கள். நோவு இருக்குமாகில், இனி எப்போதும், அத்தொழில் செய்யாதிர்கள்.

## நான் வல்லமை யுடையவனானது எப்படி?

201. வணங்கிய வணக்கங்களில் உணர்ந்து ஆராய்ந்ததாலும்; காணும் பொருள்களி லெல்லாம் காரணத்தை அறிந்ததாலும்; காரிய குணங்களெல்லாம் கண்டு பிடித்ததாலும்; உடலாய் வந்த சிரமத்தையும், சிறப்பையும் கண்டு உருகின உருக்கத்தாலும்; குறையில்லாதவர்கள் குறை கூறும் கூற்றைப் பார்த்தும், குறையுடையவர்கள் நிறை

வுடையவர்கள்போல் பேசுவதையும் கண்டறிந்த சந்தோஷத்தாலேயுமே.

1. நேர்க்கமான முடிவைத் திடப்படுத்தி முயற்சிக்கமுற்பட்ட காரியங்களெல்லாம், சீராக, சிரம மில்லா வெற்றியோடு முடிவடையும்.

2. அங்குஸ்தான் மற்றும் மேலான மரங்கள் வளர்வதற்கு முன் வேலி சுவர் அவைகளால் பாதுகாக்கப்பட்டு, அதனுல் பக்குவ மரமாய் வளர்ந்து விளைகிறது. அங்கு இருக்கும் வேலி சுவர் வளர்வதில்லை. அதுபோன்று அறிவாளிகளை அடுத்தும் கீழ்நிலை அறிவாய் இருந்திடாதிர்கள்.

## நரை திரை

202. கொழுப்பின் அம்சம் ரோமம். கொழுப்பின் சூட்டால் ரோமம் நரைக்கும். உடம்பை சூடு ஏருதபடி பாதுகாத்துக் கொள்பவர்களுக்கு நரை இருக்காது. இவர்களுக்குப் பல்லும் கெட்டியாக இருக்கும். யோகத்தாலும் தன்னுணர்தலாலும் அறிவின் பெருக்கத்தாலும் உடம்பு சூடு ஆகி நரை ஏற்படும். சுமார் 90 வயது வரையிலும் நரையுமில்லாமல் பல்லும் விழாமல் இருந்தால், அவர்களுடம்பு, குளிர்ச்சியான தென்று முடிவு கட்டலாமேயொழிய, அவர்களை அறிவாளி யென்று முடிவு கட்டாதிர்கள். முக்கியமாக, ரோமப் பற்றுதல் அதிகமுடைய குளிர்ந்த சரீரத்தில் அறிவினுடைய பிரகாசம் வெகு தொலைதூரம் செல்லக்கூடிய வல்லமை இருக்காது. நரையும் திரையும் உள்ளவர்கள்தான் அறிவினுடைய பிரகாசமுடையவர்களா என்று கேட்டால், அப்படிப்பட்டவர்கள் அறிவை நாடினுர்களானுல் வெகு சீக்கிரத்தில் அடைந்து கொள்வார்கள் என்பதே. அறிவினுடைய அபிவிருத்தியும் திடசித்தமும் இல்லாதவர்களுக்கும் கூட, நரை இருக்கலாம். அதற்கு அவர்களது உடம்பின் சூடே காரணம்.

கவலையை நிற்கவிடாதே; வியாதி அமர்வதற்கு இடமே இல்லை.

203. வருந்துவதெல்லாம் வல்லமைக் குறைவே. கிடைக்கும் துணிவுக்கு உணர்தல் வேண்டும். கடந்ததெல்லாம் அனுபவத்தில் உள்ளது. நடந்த தெல்லாம் நன்மையென்பதில் நடக்கப் போவதெல் லாம் நன்மையாகவே முடியும்.

## என் சில அனுபவக் குறிப்புகள்

204. 1942 அக்டோபர் 21உ சுமார் 1-15 மணி செவ்வாய் மறைவு புதன் பிறப்பு: நயனத்தால் வியாதி யைப் போக்கலாம். சூக்குமத்தின் மனு.

1. 1942 நவம்பர் 3உ பகல் 2-15 மணி; பிரம்மமண்ட லத்தில் லயித்தபோது அதே பதவி ஏக சிஷ்யர்களுக்கு அளித்தது. உணர்வின் சுகத்தால் உண்டானது.

2. 1945 ஜூலை 28உ இரவு 3-40 மணிக்கு 4 பேர்களு டன் நம் ராஜா வந்து நமஸ்கரித்துப் போகும்போது பின் ஒருவன் வணங்காதிருப்பதை நம் ராஜா கண்டித்து அவ னும் வணங்க, அவர்களுக்குச் சந்தோஷப்படுத்தி அனுப் பியது.

3. 1945 நவம்பர் 8உ இரவு 12-30, 12-45 மணிக்கு இருந்த உணர்வின் ஆனந்தம் அன்றுவரை இப்படி இருந் ததில்லை.

உடம்பும் மிக மிக சுகமாயிருந்தது. தித்திப்பு அமிர் தம் அதிகம் வந்தது.

எல்லா மெய்யுணர்வாளர்களுக்கும் இந்த மாதிரி யான அனுபவம் கிடைக்கும்.

இப்படிப்பட்ட நிலைமையில் இறங்குபடி கொஞ்சம் பார்த்துக் கொள்ளவும்.

எல்லா மெய்யுணர்வாளர்களும் சுமார் 3-30 மணிக்கு சூக்குமம் வந்து அதிகமான இன்பப் பேச்சும், என்னை சமாதானம் செய்தார் விநாயகம்.

## வைராக்கியம்

205. வைராக்கியத்தை திடப்படுத்திக் காண்பிக்க வேண்டியதற்காக 90 நாள் நிஷ்டை என்றும், அறையை விட்டுப் போவது இல்லை என்றும் எல்லாப் பிள்ளைகளிடமும் சொல்லிவிட்டேன். மணி 2-க்கு ஒரு அரை சிரட்டை அளவு ஆகாரங் கொண்டு இருந்து காண்பிக்க அதன்படி இருந்தேன். ஒரு மாதம் இருபத்து நான்காம் நாள் இரவு சுமார் 11-30 மணிக்கு உட்கார்ந்து கொண்டிருக்கையில் நிஷ்டையின் வேகத்தில் லயித்து இருந்தேன். அப்போது சிறு மறதி ஏற்பட்டு இருக்கும்போது ஒரு சீடர் அறையில் வந்து படி ஏறி, நான் நிஷ்டையில் இருப்பதால் கஷ்டம் இருக்கக்கூடாது என்று பின் வாங்கி படி இறங்கிப் போவது தெரிந்தது. அவர்மேல் உள்ள அன்பினால் அவர் பெயர் சொல்லிக்கொண்டே வாசற்படியண்டை போய் விட்டேன். வலது கால் எடுத்து வெளியே வைத்து எட்டிப் பார்த்து அவரைக் கூப்பிடலாம் என்ற வேகத்தில் நாம் சொல்லி யிருக்கும்படி வெளியே கால் வைப்பது இல்லை என்றது திடுக்கிட்டு ஞாபகம் வரவே எடுத்தகாலை வேகமாகப் பின் வாங்கினதில் கால்வலி யாகிவிட்டது. விழித்துப்பார்க்க உட்கார்ந்த இடத்திலேயேதானிருந்தேன். மேற்படி பிள்ளையையும் காணோம், வலியோ வேகமாய் இருந்தது. இவ்வலி மூன்றுநாள் வரை வலது தொடைக்கு மேல் புட்டானியில் இருந்தது.

இக் கருத்தில் உணர்ந்ததாவது (1) அவர்மேல் உள்ள அன்பு (2) நான் சொன்னபடி நடந்து கொண்டது. (3) இது சூக்குமத்தில் சரியாயிருப்பதால் வலி யிருந்தது.

அப்பிள்ளை இப்போதும் நன்றாய்த்தானிருக்கிறார்.

## விசுவாசத்தின் அனுபவங்கள்

203. உபதேசம் பெற்ற நாலாவது மாதத்தில் இடது காலில் பெரிய உள் சிலந்தி புறப்பட்டு இருந்து அதன் வாதையோ சகிக்க முடியாமலும் கால் ஊன்றவும் முடியா திருந்த நிலையில், குரு ஆக்கினைப் படி ஒரு மருந்தும் போட வில்லை. மேலும் நமக்கு ஒன்றும் வராதே இது ஏன் வந்தது என்ற உள் ஆலோசனையும், எங்கே குருவினிடம் போய் இதைச் சொன்னால், உறுதியை விட்டுவிட்டானே என்று சந்தேகம் அவருக்கு ஏற்பட்டுவிடுமோ என்ற எண்ணமும் இருந்தது. அவர் அவ்வூரிலுமில்லை, போய்க் காண நாளும் இல்லை. இருக்கும் தொழில் முறையில் நம் பேச்சுக்கே பயம் அதிகம். 14 மைலில் ஒரு வியாபாரி நமக்கு ரூ. 7043 பாக்கியுள்ளவன் கடை மூடிவிட்டான் என்ற செய்தி வந்தது. என்னைக் கண்டாலே அவன் ரூபாய் கொடுப்பான் என்றும் நமது கடைக்கு அது வரும் என்றும் திட்டமாக கடைக்காரர் அனைவருக்கும் தெரியும். மணியோ இரவு 8-30. அச் சமயத்தில் போக்குவரத்து வண்டிகள் 6-மணிக்குமேல் இல்லை. கடையின் பொறுப்பில் விசுவாசமும் அதிகம். அவர்கள் என்னைக்கண்டு எப்படி சொல்வது என்ற யோசனையில் இருந்தார்கள். அப்போது நல்ல சைக்கிலைத் துப்புரவு செய்யச் சொல்லி ஒரு காலால் மிதித்து போய்ச் சேர்ந்தேன். என்னைப் பார்த்து அவன் பிரமித்து மலைக்க நான் வந்தது உங்கள் பொருட்டே அல்ல, பயமில்லை என்று சமாதானம் சொல்லி காலில் உள்ள வாதையைக் காண்பித்தேன். உடனே ஒரு அறை யில் படுக்கைத் தயார்செய்து கொடுத்தார்கள். வாதையின் இம்சையோ என் சொல்வது. அதை உபதேச இடத்தில் வாங்கிக்கொண்டு படுத்துவிட்டேன். குருவும் ஒரு டாக் டரும் அங்கு வந்தார்கள். எனக்கோ அவர் இதைப் பார்த்துவிட்டாரே என்ற பயத்தோடு குருபிரானே

எனக்கு இது ஒரு வலி இல்லை என்று சொல்லி அவரை சமாதானம் செய்தேன். அவர் சிரித்துக்கொண்டே பரவா யில்லையென்று சொல்லி அந்த டாக்டரைக்கொண்டு ஆப் பரேஷன் செய்தார். துர்ரத்த மெல்லாம் எடுத்து விட்டுக் கத்தியை பிளேட்டில் வைக்கும் சத்தமும் நன்ருய்க் கேட் டது. வலி இப்போது எப்படி இருக்கிறது என்று கேட் டார்கள். ஒன்றுமில்லையே என்றேன். உடனே இதுவெல் லாம் பெரியதல்ல, மகனே! என்ற சப்தத்துடன் இருவரும் போக முற்பட, சந்தோஷத்துடன் அனுப்ப எழுந்து நடக்க முற்பட்டேன். விழித்துக்கொண்டேன். அப் போது நான் காலை நோக்காமல் இவர் எங்கே என்ற ஆலோசனைக்குப் பின் காலைக் கவனித்தேன். வாதையே இல்லை. கையால் அழுத்திப் பார்த்தேன் அதிலும் இல்லை நடந்து பார்த்தேன், இல்லை. சந்தோஷம் எப்படி யிருக்கும்?

மேல் சரீரம் பூராவும் பூரித்தது. கருணையின் கண்ணீர் தாரையாய் வந்தது, அப்போது மணி கவனித்தேன். 12-43 இரவு. அப்பகலில் மற்றக் கடைக்காரர்களுக்கு எல்லாம் ரூபாய்க்கு 2-அணு வீதமும் நமக்கு 4-அணு வீத மும் செக் (cheque) கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு மறுநாள் சுகமாய் வந்து சேர்ந்தேன். கடைக்காரர்கள் எல்லாம் வாதை இல்லாமல் சாதாரணமாய் நடப்பது பார்த்து வியப்பாய் எல்லோரும் கேட்டார்கள். இப் போது ஒன்றுமில்லை என்று சொல்லிவிட்டேன். சொன் ஞல் அவர்களுக்கு என்ன புரியும்?

207. இருள் — இடம்.
ஆதி — நினைப்பு.
நாதம் — சப்தம்.
ஜோதி — மகா காரண லோகம்.
மலர் — காரண லோகம், சித்தர்கள் லோகம்.

சூக்குமம் — சூக்கும தேவர்கள் லோகம், சொர்க்க லோகம்
ஸ்தூலம் — பூலோகம், சரீர லோகம்.
பூதம் — பேய், பிசாசு லோகம், பூத லோகம்.

1. நான் — நினைப்பு
நானின் வேகம் நாதம்
நானின் உருவம் ஜோதி
நானின் பிறப்பு அறிவு
அறிவின் உருவம் காரணம்
காரணத்தின் பிம்பம் சூக்குமம்
சூக்குமத்தின் உருவம் ஸ்தூலம்
ஸ்தூலத்தின் சேட்டை பிசாசு உடம்பு
ஸ்தூலம், சூக்குமம், காரணம் — முப்பாழ்
இவைகளைத் தாண்டினால் சோதி, நாதம், ஆதி.
இவை எல்லா மிருப்பது இருளில்.

2. நான் — ஆதி — நினைப்பு — உயிர் — கடவுள் (ஒரே பொருள்).
ஜோதி — மகா காரணம் — கரு — விந்து (ஒரே பொருள்).
ஆயிரத்தெட்டு மலர் — காரணம் — அணு அறிவு (ஒரே பொருள்).

மகா காரணம், சூக்குமம் இவை அழியாத லோகங்கள்.

3. ஆயிரத்தெட்டு மலர் அல்லது காரண லோகமே முதலில் எல்லாம் தங்குமிடம். உலகத்தில் வந்து அனுபவித்ததன் பின் சித்தர், ஆராய்ச்சியாளர், பெரும் நல்லடியார்கள், தங்குமிடம், அறிவின் எல்லை. சரீர லோக மக்கள் எல்லோருக்கும் காரணலோகம் ஒன்றே. சூக்கும லோகமும் ஒன்றே.

4. சரீர லோகங்கள் ஒவ்வொன்றிற்கும் அவ்வவ் லோகங்களோடு சேர்ந்து பூதலோகம் ஒன்று இருப்பது எது போல்? குற்றத்திற்காக உள்ள தண்டனைசாலை போல்.

## பிறவி யாருக்கு இல்லை ?

208. 1. தன் அனுபவத்திற்கு வராமல் கருத்தில் முடிவறிந்தோருக்குப் பிறவி யுண்டு.

2. அனுபவத்திலேயே அந்நிலைவரைக்கும் வந்து தன் முடிவு அறியாதவர்களுக்கும் பிறவி யுண்டு.

3. அனுபவத்திலும் வந்து தன் முடிவைத் தீர்க்கமாகத் தெரிந்து கொண்டவர்களுக்குத்தான் பிறவி இல்லை.

## ஐக்கியம்

209. கூடுதல், ஒற்றுமை, இணங்குதல் ஐக்கியம்.

1. ஆதி, நாதம், ஜோதி, அணு, அறிவு கூடியதே உருவம்.
2. விசுவாச அன்பு அறிவு கூடியதே ஒற்றுமை.
3. அறிவும் கருவும் குருவும் கூடிய தவ அனுபவமே ஒற்றுமையின் முடிவு,
4. அநேக குண மன ஆசை, அறிவுக்கு இணங்கிய போதே அவனை அவனடையும் விருப்ப உற்பத்தி.
5. தரித்த ஒரு அணுவுக்கு அநேக அணுக்களின் இணங்குதலே இவ்வுடம்பு.
6. பருவத்தில் அவ்வணு உச்சியில் தரித்தால் உடம்பின் அணுக்களின் இன்ப சுக பரவுதலின் நிறைவே உடம்பின் ஐக்கியம்.

7. நினைத்தல், நிலைத்தல், உணர்தல், அறிதல் அனுபோக விருப்பமே இன்பம். அறிவுக்கு எட்டியது எதுவோ அதுவே உணர்வு. உணர்வில் நிலைத்து உணர்ந்த அறிவால் அறிவைக் கடந்த நினைப்பால் இவ்வுடம்பைக்கியம்.

8. நினைவும் கருவும் அறிவும் அம்பலத்தில் கூடுதலின் இன்பமே பேரின்பம்.

9. குரு சிஷ்யரின் அறிவின் அபிவிருத்தியே பரம்பரை.

10. ஒருபடி உப்பும் ஒருபடி நீரும் ஒருபடியிலேயே நிரவுதல்போல் தவத்தின் இன்பக் குளிர்ச்சியில் இவ்வுடம்பின் நிரவுதலே ஐக்கியம்.

11. ஒரு அடுப்புக்கரித் துண்டில் பற்றிய சிறு நெருப்பு எவ்வாறு காற்றினால் கொஞ்சங் கொஞ்சமாக முழுதும் பரவி கங்காகமாறிவிடுகின்றதோ அதேபோன்று, குருவினிடம் உபதேசம் பெற்ற சிஷ்யனின் விசுவாசக் கனலின் குளிர் இன்பப் பெருக்கமே ஐக்கியம்.

12. உன்னை நீ யறிந்தால், நீ வேறு ஈசன் வேறல்ல.

## ஐக்கியமடைவோர்

210. (1) ஐக்யத்தை விரும்பி ஒரே ஏக்கமுடையவர் தன் ஏக்கத்தின் பலனால் சூக்குமம் பக்குவமடைந்து ஐக்கியமாகிக்கொள்வர். ஆனால், இவர்களுக்குப் பிறவியுண்டு.

(2) ஒரு தவத்தின் பற்றுதலாலேயும், அறிவின் மேல் நிலையாய் எல்லா இடத்திலும் சமமாயிருந்து எல்லாக் கொள்கை விபரங்களு மறிந்து, எல்லா சிருஷ்டியும் தன் சிருஷ்டியாகக் கண்டு ஐக்கியமானால் அவனுக்குப் பிறவியில்லை.

(3) தவம் தேடியலைந்து வெகு பிரயாசைப்பட்டு பின் அவன் முடிவு அவனறிந்து மேல் கூறியதுபோல் அறிந்த ஒருவர் சரீரத்தை மட்டும் ஐக்ய மாக்காதபடி தான் மறைந்தால் அவருக்கும் பிறவியில்லை.

(4) சிலர் கண்களின் அப்பியாசத்தால் பிறர் கண்களுக்கு மட்டும் உடம்பை மறைத்துக்கொள்வர். இவர்கள் உடம்பு ஐக்கியமானதல்ல. அதனை வேறொரு இடத்தில் காணலாம். இது ஒரு சித்தேயாகும். இவர் முத்த

ராகமாட்டார். இவர்களுக்குப் பிறவியுண்டு. பின் இதே உலகத்தில் மாண்டு பிறவி யெடுப்பர்.

(5) உண்மை ஐக்கியம்:—ஐக்கியமாகக் கூடிய உடம்பா யிருந்தால் வெளிச்சத்தோடு வெளிச்சமாய்த், தான் ஐக்கிய மாகும்போது தன் உடம்பில் அணிந்திருந்த ஆடை, ஆபரணம், அரைஞாண் முதற்கொண்டு ஐக்கியமான இடத்தி லேயே கிடக்கவேண்டும். அதுவே ஐக்கியமென்பது. இதி லும் அவ்வறிவு தெளிவாயிருந்தால்தான் பிறவியில்லை. அறிவு ஒன்றைப்பற்றி யிருந்தால் பிறவியுண்டு.

211. எழுத்து முடிவு, பொருள் முடிவு, இட முடிவு, தத்துவ முடிவு எல்லாம் விளக்கிக் காட்டிய தன் பின் உபதேசந் தந்து, பின் அநுபவமெல்லாம் அபிவிருத்திக்குக் கொண்டு வருவதே இச்சபை. இதில் சேர்ந்தோர்க்கு மெய்யுணர்வாளர்கள் என்று பெயர். இவர்கள் தம் கருத்தின் முடிவும் அநுபவ முடிவும், தம் முடிவும் தீர்க்கமாகவும், திடமாகவும் தெரிந்து மேற்சொன்ன உண்மையான ஐக்கியமடை கின்றார்கள்.

• • •

குணமும் தனமும் கூடிய இருதயத்தில்
மனமும் மதியும் ஒன்றாய் பிரகாசிக்கும்.

• • •

## உணர்வு

### (ஏறு படி)

212. உந்திக்கு நேரே உள்மூலம் தன்னை
ஊன்றி ஏற்றி
உதித்த இடம் பாய்ச்சி ஞயாகில்
உள்ளம் கரிந்து, உச்சி திறந்து
உண்மை தெரிந்து ஊடுருவிப் பாரே.

213. கருவான கருவைக் காண்ப தென்றால்
கருவறிந்த குருவைப் பாரே.

214. இவ்வுபதேசம் பெற்றதும் உபதேசமான இடத்தில் ஒரு சிறு பாரமும் போதையும், ஜலதோஷம் பிடித்தது போன்றும் நெற்றியில் எண்ணைப்பசையைப் போல் தேஜசும், அம்மைப்பால் வைத்த, அல்லது மாம் பழப்பால் பட்ட அரிப்பு போன்றும், சிறு கடிகாரத்தினு டைய சப்தத்தைப் போன்ற துடிப்பும் ஜாதிபத்திரியின் ரெட்டையில் ஒரு சொட்டு பாதரசம் இருப்பதுபோல் கனமும் ஆட்டமும், ஒரு ரோமத்தில் சூடான நெய் இறங்கி வருவதுபோன்றும், சிறு சூக்ஷமான நோவும், 6, 7, நாட் களுக்குப்பின் இவைகளெல்லாம் அதிகமாகவும் தோன்றும்.

பெரும் வைராக்ய முடையவர்களுக்கு ஒரு முட்டை அளவுக்கு உருக்கிரும்பைப் போல் கனமாக உருளும். மேலெல்லாம் அசதி தோன்றும்; ஆனல் திர தைரியமும் இருக்கும். கடலைப் பார்க்காதவன் பார்த்தவுடனடையும் வியப்பைப் போன்றும், பட்டணம் பார்க்காதவன் பார்த்த வுடனடையும் வியப்பைப்போன்றும், கலியாணம் முடிந்த மறுநாள் அல்லது மூன்றும் நாள் அடையும் வியப் பைப்போன்றும் இருக்கும்.

215. இவ்வுணர்வு அடைய வேண்டியவர்கள் இதன் வேகத்தை மட்டும் குண்டலிசக்தி என்பர்.

## குண்டலி சக்தி

216 ஏன் இப்பெயர் அமைக்கப் பெற்றது? இச்சக்தி ரூபாரூபா வாயிலாக நிர்வகிக்கும்போது தன் மனோமய கோசங்களில் சிக்கிக் கொள்ளுகிறது. அப்போது, தன் சுய சக்தி குடிலையிலேயே இருந்து கொள்கிறது. இதிலிருந்து விடுபட்டவுடன் சுண்டெலியைப்போல் தந்திரமாக குணாதி விஷயங்களைத் துண்டிக்காமல் ஆமோதித்தே ஜெயித்து சிரசையடைந்ததும் தன் சுயசக்தியின் பிரகாசமாய் அனுப விக்கும்போது சிறப்போடு அலங்காரமாய் ஏற்படுத்திய உதாரணப் பெயரே குண்டலி சக்தி.

217. மனோமயங்களில் ஈடுபட்டபோது கடவுள் குண்டலி சக்தி, ஏகாக்கிரக சக்தி என்றும் சொல்லப்படும். அவைகளினின்று அறிந்து விடுபட்டபோது எல்லாம் நானே எனப்படும்.

218. அபாயத்தில் போடும் சூக்தராலுக்கும்
தன்னைத் தேடிப் பாடும் அருள் பாடலுக்கும்
தன் நிலை சிறப்படைந்தோரின் வாக்கு
ஓர் நிர்ணயிப்பு இல்லை. [வெகுமதிக்கும்

## உணர்வின் அனுபவம்

219. கருதரித்த மூன்று நான்கு மாதங்களில் கர்ப் பிணிக்கு வாந்தி மயக்கம் உண்டாவதுண்டு. இவ்வற்ப சிரமங்களைக் கண்டு அவள் மலைப்பதில்லை. தாகமாகவே இருந்து உருவை வளர்க்கிறாள். அதுபோல் குருவை அடைந்து கருவை அம்பலத்தில் தரித்திருப்பதால் நான்கு மாதம் ஒரு வருஷத்திற்குள் தவத்தின் பிரயாசைக்குத் தக்க படி கபம் வரும், சிறு இருமல் இருக்கும். அது ஒரு மாதம் ஒண்ணரை மாதம் வரை இருக்கும். பின் எப்போதும் ஏற் படாது.

1. பத்துமாதங்களுக்குமேல் இரண்டு வருஷங்களுக்குள், ஒரு புருவின் கண்ணைப் போன்று சுத்தி செய்தயிடத்தில் உருளுவது தெரியும். அக்கண்ணினுள், அறிவும் அபிப்பிராயங்களும் நுழைந்து பார்க்கும். அதற்கும் நாளடைவில், அதிலேயே நாமிருந்து கொண்டு எல்லா வேலைகளையும் செய்யலாம். அப்போது ஒளி நன்ருய் சுழன்று சுகத்தை அனுபவிப்பதோடு தன் ஏகசக்தியிலேயே தான் இலயித்தே பரவியிருப்பது தன் அறிவிற்கு உணர்ச்சியாய் நன்ருய்த் தெரியவரும்.

2. நெற்றி ஒரு பல்பைப்போன்றும் நெற்றிக்குள் உணர்ச்சியளவில் பிரகாசம் அதிகமாகத் தெரியவரும். வெளிச்சத்தில் இலயித்து இருக்கும்போது சரியான இழுவை சக்தியும் அதன் பாரத்தினுடைய அனுபவமும் இருக்கும். ஒரு ரோமத்தை இழுத்து அறுபடுவதற்கு முன் அந்த ரோமம் எவ்வளவு தொய்வு கொடுக்கிறதோ அதைப்போல் ஸ்தூலமும் சூக்குமமும் காரண சக்தியும் ஒன்றேடொன்று இணைந்து இருக்கும். இழுவையைத் தன் மூச்சு அங்கிருந்தே நடத்தும். அனுபவத்தால் தன் அறிவில் அறியலாம்.

3. ஏதோ ஒரு கண்ணைக்கொண்டு அங்கு இருந்து பார்ப்பதாக உணர்ச்சியும் துணிவும் இருக்கும். இந்த இருகண்ணைப்போல் ரூபா ரூபம் ஒன்று தோன்றவில்லை என்ற அதிக வியப்பின் வேகமிருக்கும்.

4. இக்கண்ணுக்குத் தெரிவது சிறிது துலை; அக்கண்ணின் வேக விழிப்போ அநேக விஷயாதி விஷயங்களையும் நூருயிர வருஷ காலத்தின் மறதிகளையும் ஒரு நொடியில் தெரியப்படுத்தி விடும். அப்படி ஆயிரக்

கணக்கான வியப்புகளால் வரும் ஞாபகத்தால் எல்லா இரகசியமும் தனக்குள் தெரிந்து கொள்வர்.

5. கண்ணால் பார்த்த அநேக தோற்றங்களும் காதால் கேட்ட அநேக விஷயங்களும் எப்போதும் ஞாபகத்திலிருப்பதில்லை. சமய சந்தர்ப்பத்தில் சிறிய உதாரணத்தை எடுத்துப் பேசும்போது வெகு காலத்திற்கு முன் நடந்த விஷயங்கள் ஞாபகத்திற்கு வந்துவிடுகின்றன. உலக நல்லடியார்களே! அதற்கு அத்தாக்ஷி பார்த்தவனும் அத்துடன் இருந்து பார்க்கப்பட்டவர்களும் தன் தன் அறிவிலேயே அது சரி என்று நினைத்து ஆனந்தித்துக்கொள்ளுகின்றனர். அவ்விடத்தில் பழைய காலமோ, அந்த இடமோ ஆஜராக இல்லை. ஆஜராக இருப்பது பார்த்தவர்களுடைய அறிவே அத்தாக்ஷி. அழிந்தது ஒன்று. அது அழியாமல் இருப்பது அநேகர் அறிவில். உலகத்தில் அநேக தோற்றங்கள் கால அளவில் பிரிந்து அழிந்து புதிதாய்த் தோன்றும். அது போன்று மகாகாரண, காரண, சூக்கும, லோகங்களும் பூத லோகமும் அழிவதில்லை. அவனவன் நினைப்பின் ஏக்கம் அறிவில் பதிந்து அழியாதிருந்து கொண்டிருப்பதோடு மேல் சொன்ன லோகங்களில் இருந்து வந்த அனுபவங்களும்கூடி ஆருதாரத்திரைகளாய் அழியாது மறைந்திருக்கின்றது. இச்சபையின் உபதேசம் வெகு தொலையில் உள்ள இடத்தை அழைத்துச் சென்று காட்டுவதுபோன்று நெற்றியைக் கடத்தி தன் நிலையாய் உள்ள உணர்வை ஆருதாரத்தின் மேல் நிறுத்துகிறது. அவ்வுணர்வின் சக்தியால் எல்லாம் அறிந்துகொள்கிறீர்கள்.

என் இருதய மலர்களே! மந்திரமும் கடந்தீர். தந்திரத்தால் தன்னுள் புகுந்தீர். சாகா உடம்பில் வேகா உணர்வடைந்தீர். மனிதரில் மனிதராய் மனுஈசனாய் வாழ்கின்றீர்.

காமத்தின் விளைவு முதுகால்
காமத்தின் எண்ணம் கண்ணால்

காமத்தின் அடக்கம் நெற்றியால்
காமத்தின் முடிவு உச்சியில்
கொண்ட ஆசை காது கண்ணால்
ஞாபகப்பதிவு பிடரிக் கண்ணால்
ஞாபகிப்பது நெற்றிக் கண்ணால்
பெரும் முடிவான நீதி தீர்ப்பு உச்சிக்கண்ணில்.

7. பெண்களுக்கு மாத முறை பத்து மாதம் அல்லது இரண்டு வருஷங்களுக்குள் நின்றுவிடும். பின் குழந்தை தரியாது.

மெர்க்குரி (Mercury) விளக்கு வெளிச்சத்தில் உணர்வு நன்றாக இருக்கும்.

8. பெருஞ்சிரிப்பால், காமம், கோபம் அடக்குவதால் உணர்வு அதிகம்.

9. உணர்வு அதிகமான பின் பச்சை தண்ணீர் உபயோகப் படுத்திக் கொள்ளவும்.

10. புதிதாய் சுண்ணாம்பு அடித்த இடங்களில் மூன்று நாள் வரை அவ்வாடையும் வெங்காய வாடையும் உணர்வுக்கு ஆகாது.

11. கெட்ட நெய், பெருங் கூட்டத்தின் விருந்து ஆகாரம், நாள்பட்ட எண்ணெய்ப் பலகாரங்கள், இதுகளால் அதிக உணர்வு ஏற்பட்டு சுகமில்லா சலனவாதை இருக்கும்.

12. மாதளம்பழம், அன்னாசி, கரும்பு சார், புது மண்பானை தண்ணீர் இவைகளை, ருசியை மேல் நோக்கி சாப்பிட்டால் சீதளம் உண்டாகும்.

குதிக்காலில் சிறு மின்சார அதிர்ச்சி (Electric Shock) இருக்கும்

## உணர்வின் இன்பம்

13. ஒரு குளோப்பிற் குள்ளிருக்கும் விளக்கின் திரி ஆடும்பொழுது, வெளியே தெரியும் அவ்விளக்கின்பிரகாச

விழல் ஆடுவதுபோல், திரி உணர்வாகவும், அத்திரியினது சுடர் காரணமாகவும், ஜுளோப்பானது சூக்கும மாகவும், அவ்வெளிச்சத்தினது ஆட்டம் சரீர உணர்ச்சியாகவும் தெரியும்.

*14.* உருவு முடிச்சால் ஒற்றை நூலில் போடப்படும் பின்னலை அவிழ்க்கையில் ஒரு முனையில் இழுத்தால் அப் பின்னல் எடுபட்டு நூல் வருவது போல் உணர்வின் இன் பம் தெரியும்.

*15. (1)* நடுப்பகல் சூரியனைக் கிணற்றுக்குள்ளுள்ள தண்ணீரில் கண் கூச்சமில்லாது பார்த்தபோது தெரியக் கூடிய கலக்கமில்லா சூரிய பிம்பத்தைப்போன்றே இருக் கும் உணர்வின் சுக இன்பம்.

உணர்வில் நன்றாய் சுகித்து இருப்போர் எதிரில் எவ் வகைச் சிறு அசைவுகள் ஏற்பட்டால் தண்ணீர் சிறு அசைவால் சூரிய பிம்பம் கலையப்படுவதுபோல், உணர் வின் சுகத்திற்குச் சலனம் ஏற்படும்.

*(2)* உணர்வில் இலயித்து சுகித்து சுகத்தில் இருக் கும்போதுள்ள அறிவின் பெரும் ஆற்றலில், மனதின் துற் குண நற்குண ஓட்டம் தன் அறிவுக்குப் பிடிபட்டு அது நல்லதிலேயே சேர்ந்துக்கொள்கின்றது. அவ்வோட்டத் தால் எவ்வித பங்கமும் உணர்வுக்கு இல்லை.

*(3)* அது எதைப்போன்று என்றால் பிரகாச வெளிச்சமுள்ள இடத்தில் இருக்கும் வஸ்துக்களும், நடக்கக்கூடிய எல்லா விபரமும் தெரியும் தெளிவுபோல்.

*16.* மழைக்காலத்தில் சிறுநீர் செய்யமுடியாமல் வெகு நேரம் கழித்து இடவசதி கிடைத்தவுடன் சிறுநீர் செய் தால் எப்படி ஒருவித இன்பம் தெரியுமோ அதுபோலும், ஐஸ்போல் குளிர்ந்த ஜலம் இருக்கும் கிளாஸைத் தொட் டால் உள்ள குளிர்ச்சியின் இன்பத்தைப்போலும் உணர் வின் சுகம் இருக்கும்.

17. வெயிற்கால நடுப்பகல் சூரியன், வீட்டுக் கூரையின் சிறு துவார வழியாய் வீட்டினுள் ஒரு ரூபாய் அளவுக்கு பிரகாசிப்பதைத் தன் நெற்றியில் படும்படி செய்தால் எவ்வித சுடுகையும் சூக்ஷமும் உள்ள உணர்ச்சி தோன்றுமோ அதுபோன்று இருக்கும்.

18. எண்ணெப் பந்தம் எரிவது போன்றும், பித்தளையில் அக்னித் திராவகம் (Nitric Acid) பட்டால் கொப்பளிக்கும் குமிழியைப் போன்றும் உணர்வின் சுகம் இருக்கும்.

19. அரை அங்குல குழாயில் வேகமாய் வரும் நீர் உச்சியில் பட்டால் எவ்வித உணர்ச்சியிருக்குமோ அதுபோல் இருக்கும்.

20. நீராவி ஒரு குழாய் துவாரத்தில் வேகமாய் சீறுவதைப்போன்றும், தண்ணீர் சிறு துவார வழியாய்ப் பெரும் இடம் புகுவதைப் போன்ற வலம்புரிச் சுற்றும் இருக்கும்.

21. i. வேகமாய்ச் சாணை சுற்றும் சுழலில் தீட்ட வரும் நெருப்புப் பொறியைப் போன்று நெற்றிக்கண் சமயா சமயத்தில் வேகம் இருக்கும்.

ii. வெந்த இடங்இல் உள்ள ஆவியைப்போல் குளிர்ந்த (Gas) கியாஸ் பரவி சுற்றும் அனுபவமும், கண்களில் குளிர்ந்த தண்ணீர் பட்டாற் போலும், நாளடைவில் தலையெல்லாம் உணர்வு அதிகமாகவும், உரித்த இளம் நுங்கு போன்றுதன தளப்பும் குளிர்ச்சியும் இருக்கும். காது கன்னம் இது எல்லாம் பரவி கியாஸ் சுத்தும். காது அழுக்கை உருண்டையாய் உருட்டி தானே வெளியில் வந்துவிடும்.

22. இரும்பை நன்முக நெருப்பில் காய்ச்சி அதை நீரில் தோய்த்து உடனே அதைத்தொட்டால் ஒருவித சூட்டின் உணர்ச்சியும், அதோடு குளிர்ச்சியின் உணர்ச்சியும், சிறு சப்த அதிர்ச்சியும் இருப்பதுபோல் இருக்கும்.

23. வேர்வையில் விந்து வாசனை இருக்கும். அல்லது சுறியன்பழம் வாசனையைப்போல் இருக்கும்.

24. வைரத்தில் உள்ஔேல் தோன்றுவது போலும், கண்ணாடிக்குள் காற்று குமிழ் தெரிவதுபோலும் அறிவிற்கு உணர்வின் உணர்ச்சி தெரியவரும்.

25. கெட்டியாய்ப் பிசைந்த கோதுமை மாவில் விரலை அழுத்துவதால் விரலுக்குத் தட்டுப்படும் மழுமழுப்புடன் கூடிய அழுத்தமான உணர்ச்சியைப் போன்று உணர்வின் இன்பம் உண்டு.

26. கப்பியின் கயிற்றின் இழுவையால் கனம் மேலேறுவது போன்று சும்மாயிருந்து நுட்ப கவனிப்பால் உணர்வின் கன இன்பம்.

27. சோப்புநுரை, தண்ணீரில் பரவுவது போல் உணர்வின் உணர்ச்சி இன்பப்படும்.

28. மழைக்காலங்களில் ரோட்டில் மண்ணெண்ணெய், பெட்ரோல் சிந்தியிருந்தால் பரவிப்பலவர்ணங்களோடு தெரிவதுபோல் உணர்ச்சியிருக்கும்.

29. நல்ல தவமுடையவர்களுக்கு வெள்ளி, தண்ணீரைப்போல் காய்ச்சப் பட்டபோது அத்தண்ணீரின் மேல் உலாவும் ரசத்தின் பிம்பத்தைப் போன்று இன்ப உணர்ச்சி இருக்கும்.

## உணர்வைக் கவனிக்கும் முறை

30. உடம்பில் யாதோர் பலத்தையும் கொடுக்காமல் சாதாரண நிலையில் யதார்த்தமாக வைத்திருப்பது. ஆசனங்கள் போட்டு உடம்புக்கு கஷ்டம் கொடுத்து உணர்வைக்கவனிப்பதால் உணர்வினுடைய அபிவிர்த்தி தெரியவராது.

31. காற்றுக்காலங்களிலும் மழை மூடலாயுள்ள காலங்களிலும் உணர்வைக் கவனித்து அதிகப்படுத்திக்

கொள்ளுங்கள். மழைக்காலங்களில் நல்வாக்குக் கொடுப்பதைவிட வெயிற் காலங்களில் கொடுங்கள்.

32. கருணைக்குக் கீழ்ப்பார்வை, உற்சாகத்திற்கு மேல் பார்வை.

33. பேசும் பேச்சு, கேட்கும் சத்தம், பார்க்கும் பார்வை, நடக்கும் நடை, நினைக்கும் நினைப்பு. சாப்பிடும் சுவை, போகத்தில் இன்பம், இவைகளெல்லாம் அங்கிருந்தே நடத்த வேண்டும். சுமார் பத்து நாட்களுக்கு இப்பழக்கம் இருந்து விட்டால் பின் தானாய் அதுவே அதுவாய்க் கிரகித்துக் கொள்ளும். இது இதன் இயற்கை.

34. நுட்பமான கடியாரங்களை எப்படி நுட்பமாக வேலை செய்வார்களோ அப்படி கவனித்தலும், அழகுடைய மோதிரத்தில் கல் வைப்பது போன்றும் சிறு ஊசியில் நூல் கோர்ப்பது போன்றும் ஒருவர் ஞாபகம் வந்து அவர் பெயர் ஞாபகத்திற்கு வராவிட்டால், அதை நினைப்புக்குக் கொண்டுவர ஞாபகத்தில் ஆராய்வது போன்றும் உணர்வைக் கவனிக்க வேண்டும்.

35. மறைவான திரையில் ஊசித் துவாரத்திலும் சிறிய துவாரம் ஒன்றிருந்து அத்துவாரத்தின் வழியாக அத்திரைக்கப்பாலுள்ள விஷயங்களை எப்படிக்கவனித்துப் பார்ப்பீர்களோ அதே போன்று கவனிக்க உணர்வு அதிகமாகி இன்பமும் இருக்கும்.

36. அச்சிறு துவாரத்தில் கண்ட எல்லா தோற்றமும் அத்துவாரத்தில் நுழைவதல்ல. நுழைந்திருப்பது யாரிடத்தில்? பார்த்த அறிவுடையோனிடத்தில்.

37. அனுபோக மில்லா மெய்யுணர்வாளர்களே! உங்கள் நன்றி சபைக்குரியது. சபை நன்றியை வந்து கிரகித்துக் கொள்ளுங்கள்.

## இறங்குபடி, சுத்தி.

38. உச்சிக்கண்ணை யடைந்தும் (ஞானக்கண் பார்க்க) முத்தியடையாமற் சென்றவருடைய ஏக்கமே இன்று இறங்குபடியாக அமைந்துள்ளது.

39. பின்கண்ணிலிருந்து மெதுவாக கீழே பாவனை செய்து மூலக்கண்ணைக் கவனித்தால் மெல்லிய நூல் வழி யாய் ஜலம் இறங்குவது போலும் கால் திமிர் பிடித்திருக் கும்போது ஏற்படும் உணர்ச்சி போலும், எறும்பு ஊறு வதால் ஏற்படும் உணர்ச்சி போலும், சிறு வெப்பின் ஆவி யைப்போலும் இருக்கும். மூல வியாதி இருப்பவர்களுக்கு உடனே அம் மூலம் தோன்றும். இடுப்பும் நோகும். பசி அதிகரிக்கும். சிறு கபங்கள் தோன்றும். சிலருக்கு அபார மான கனவுகள் தோன்றலாம். இதற் கிடையில் அடிக் கடி தலைபாரம் ஏற்படும். நீர் மட்டத்தில் (Water level) உள்ள காற்றுக் குமிழி போல் மேல் நோக்கி வந்து கொண்டே இருக்கும். அவ்வப்போது மேலே சொன்ன பாவனைபடி கவனித்து கீழ் நிறுத்த வேண்டும். அதிகமாக இதைப் படுக்கையில் கவனிக்க வேண்டும். பின்பக்கம் என்ன தெரிகிறது என்று அபிப்பிராயத்தைக் கொண்டு பார்ப்பது போல் கவனிக்க வேண்டும். நல்ல சாப்பாடு, நித்திரை, வசதியுள்ளவர்களுக்குச் சிற்றின்பம், இவைகள் நல்லது.

40. மெய்யுணர்வாளர்கள் இதை சரிவர ஆறு நாள் நன்றாய்க் கவனித்து இவ்விடம் சுத்தி செய்துகொண்ட வர்கள் தம் தம் வேலையுடனே உணர்வும் நன்றாயிருக்க அறிவார்கள்.

## இதன் நன்மை

41. மாய்கையை அடித்து வீழ்த்த, இம்மரணப்பாதை யைச் சுத்தமாக்கவே இறங்குபடி. புல் அடர்ந்த மலையில்

மனிதர்களின் பாதம் அடிக்கடி பட்ட பாதையில் ஒன்றும் முளையாதது போன்று, இவ்விறங்குபடியின் பாதையில் உணர்வு செல்வதால் ஏற்படும் அறிவின் உஷ்ணத்தால் இப்பாதை எப்போதும் அடை படுவதில்லை. மரணிக்கக் கூடிய பொருள் இப்பாதையின் வழியாய்த் தன் யதார்த்த ஸ்தானத்திற்கு யாதொரு தடையுமில்லாமல் போக்கு வரத்து சகஜமாகி விடுவதால் மாய்கை மரண பய மில்லை. இவ்வாறு மரணமே இல்லாம லிருப்பதுடன் அப்பொரு ளின் விளைவு அதிகரிப்பால் தேஜஸ் மிகுந்து அப்பொரு ளின் தன்மையாகவே சரீரம் பூராவும் மாறுதலடைந்து அப்பொருளின் யதார்த்தமான ஜோதியாகவே மாறிவிடும், அதுவே ஐக்யம்.

## நான்

நான்யார்? நானே நான். நானே நினைப்பு. நினைப்பே நான்.

கருவைத் துளைத்தேன் கண்ணை விழித்தேன்
அறிவை உரைத்தேன் கண்ணிடை நடுபுகுந்தேன்
உன்ஞச்சியில் அமர்ந்தேன் என் உருவில் நான்
நிலைத்தேன் எரிக்க வேண்டிய தெல்லாம் எரித்தேன்
எரியாத தொன்றில்லை என்றறிந்தேன்
எப்போதும் எரியாதவன் நான் ஒருவனே.

1. ஆதி அல்லது நினைப்பு நான். இருப்பது இருட்டில். வித்து விளைவது அதை மூடிய இருட்டால். குழந்தை தரிப்பது கருக்குழி இருட்டில். அதுபோல் நெற்றித் திறந்து அம்பலத்தில் கருதரித்த பேரறிவால் தன்னை அறிந்து அனுபவிப்பது.

2. அலையில்லாப் பெருங்குளத்து நீரில் சிறு மழைத் துளிகள் சிறுவட்டங்களாகப் பரவுவது போல் சிறு குணங்களில் உள்ள நான். பெருங்கல்லைப் போட்டால் அவ்வட்டம் எங்கும் பரவுவது போல் அறிவால் காணப்படும் நான்.

3. ஆராய்வது எப்படி? ஒருவரோடு பேசிக்கொண்டிருக்கும் போது அப்பேச்சைக் கிரகித்துக்கொண்டே தன் மனதில் தோன்றக்கூடிய விஷயங்களும், பல இடங்களின் தோற்றங்களும் இருந்த இடத்திலேயே இருந்து எப்படி தெரிந்து கொள்கிறுயோ, அதுபோல, பல குணுதிவிஷயங்களாய் உள்ள நானே மனதாய் உள்ள நானைக்கொண்டறிந்து: மனதில் உள்ள மாய்கைகளைப் புத்தி என்ற நானைக் கொண்டறிந்து: புத்தியிலுள்ள குறைவு நிறைவுகளை, ஆராய்ச்சி என்ற நானைக் கொண்டறிந்து: அவ்வாராய்ச்சியை அறிவு என்ற நானைக் கொண்

டறிந்து : பின் கருவுக்குள் உள்ள நானைக்கண்டு பிடித்த பேரறிவின் அனுபோகத்தில் வந்தால் நான் நீயாய் மாறுகிருய்.

4 நீர், மாவு, தித்திப்பு, நெய் இவை சேர்ந்த ஆகாரங்களில் ஒவ்வொன்றையும் பிரிக்க முடியாதது போன்றே குணங்களில் இருந்து அறிவு: அறிவைக் கடந்த நான்.

5. இது எழுதியது வேருெருவர் என்றெண்ணுத நீயே எழுதியதாய் ஆராய்ந்தால் நீ என்ற நான் பிடிபடும்.

6. நம்மை நாம் அறியும் ஆற்றலே வணக்கங்கள்.

7. மாளிகையில் உள்ள யோக்கியக் கள்ளனைக் கண்டு பிடிக்குமுன், அநேகர்பேரில் சந்தேக சிரமத்தை உண்டாக்குவது போன்றே தன் சரிரத்தில் உள்ள கடவுள் என்ற நினைவை கண்டுபிடிப்பது. அவ்யோக்கியனைக் கண்டு பிடித்ததை அநேக அத்தாட்சிகள் இருந்தாலேயே வெளியிட முடியும். அதேபோன்று நான் என்ற நினைவை அடைந்ததின்பின் அவ்வுண்மையைத் தெரிவிக்கப் பல ஆதாரங்கள் எடுத்துக்காட்டியே வெளியிடவேண்டும்.

8. ஈசனுயுள்ள தத்துவம் மனிதனுய் வந்து நிர்வாகம் நடத்துகிறது. மனிதனில் உணர்வைக் கொடுத்து ஈசன் நிலையடைவித்து பின் அடைந்ததை அறிந்து அனுபவிப்பதே இச்சபையினுடைய உணர்வு.

9. ஜோதியிடம் அண்டி சுடராகிய பின்னும் சொன்ன சொல்லறியா சோம்பேரி மாடுகள் சூக்ஷமமறிவதெப்போ?

சொன்ன சொல்லறிந்து சுழிமுனையில் நின்ருயானுல் சுருதி நூல் பாடும் பாட்டு என் உன் பாட்டே.

10. தன்னிலையில் தானுகி, தாரக ஒளியுமாகி
விண்ணுகி, மீனுகி, நீராகி, நிலனுகி, தாவரமுமாகி,
வித்தாகி, உருவாகி, விந்தாகி, மனுவாகி, மதியாகி,
நீதியாகி, நிலையாகி, நிலைத்தலாகி, நின்றமர்ந்த

நிலையில் அறிவில் அறிவாய் தானுகிய
நானென்ற நிலையே தன்னிலை.

அவர் எவர் யார் யாராய் இருந்தால்தான் என்ன? இவர் இவரை அறிந்தால் அவர் அவராய் பிரகாசிக்கலாம். எவர் யாரா யிருப்பினும் அவர் அவரை அறிந்தாலே தன்னிலை முடிவு.

11. இதைப் பார்ப்பது யார் அவனே நான்.

## தவக்கனல்

221. 1. அறிவை அறிய முற்படுவோர்க்கு தவக்கனல் கிட்டும்.

2. தவக்கனலின் சிறப்பு வெளிச்சம்
தவக்கனலின் விளைவு வித்து.

3. கனல் ஞானிகளுக்கே யன்றி யோகி, பக்திமான் இவர்களிடத்திலும் உண்டு. ஆனல் இவர்களிடமுள்ள கனலுக்கு வித்தியாசம் உண்டு.

4. பக்திமான் நிலை கருதரித்து வளர்வதுபோலும், யோகியின் நிலை முட்டைக்குள் உருவாக உழன்று கொண்டிருப்பது போலுமாகும். ஞானியின் நிலையோ வாலிப பருவத்துடன் எங்கும் சுயேச்சையாய் செல்லக்கூடிய தன்மையைப் போன்றே.

5. தன் தொழிலோடு சேர்ந்து சிறந்தது தனது தனிமைத் தவத்தொழில்.

6. சுவாமி! நெற்றியின் சுடர் பட்டு பஞ்சும் எரிந்தது. துணியும் எரிந்தது. நான் பார்த்தேன். அப்பா. அப்படியா! கேட்ட கேள்வியா? உன் கண்ணுல் பார்த்தாயா? பார்க்க வேண்டியதில்லை அவரைப் பார்த்தாலே எரிந்து கொண்டிருக்கிறது. எரிந்தது பார்த்தாயா? எரிக்கப் பார்த்தாயா? ஒருவர் சொல்லல்ல அநேகர் சொல்லுகின்றனர். தற்போதிருக்கின்ருரா? மடிந்துபோனுன். சரியே. இருந்தாலும் இருக்கலாம். அறிவைக் கொண்டு அறிய முற்படு. உங்கள் முடிவென்ன?

முடியாதென்றால் நீ தளர்ந்துவிடுவாய். முடியுமென்றாலும் எங்கே பார்ப்போம் என்பாய். அதற்காக வேண்டித்தான். உன் அறிவின் ஆராய்ச்சி ஆற்றல் போதாமையாக இருக்கிறது, என் இச்சொல்லால் உன்னில் இருக்கும் அறிவு பிரகாசித்து அறிந்து கொள்வாய்.

தேஜஸ்

222 தொழிலின் செழிப்பால் உழைப்பால்
வறுமையில் பொறுமையால்
பணப்பெருக்கால் பக்தி ஓர்மையால்
அறிவில்லாக் குற்றமற்ற உடம்பால்
கற்பின் தீரத்தால், தன்குற்றம் உணர்வதால் :
இதற்கெல்லாம் கடந்தது இச்சபைக்
கரு தவத்தால் விளங்கும் தேஜஸே.

1. தேஜஸின் நிறம் பழுத்த எலுமிச்சம் பழம், சொக்கத் தங்க நிறம் போன்றும், மூன்றும் பிறைச் சந்திரன் நிறம் போன்றும், ரேக்கின் மின்னலைப் போன்றும் இருக்கும். இதற்காகத்தான் நெற்றி சிரிக்க, கன்னம் பூரிக்க, இருதயம் மகிழ, அறிவு ஆனந்திக்க உங்களில் நீங்களாக இலயித்து இருக்கின்றீர்களா. இலயித்திருக்கிறீர்கள் என்று சொல்லுவேன்.

2. கொடுத்த வேலையோ பெரியது. நீங்கள் கொடுக்கும் வெகுமதியோ அறிவின் பெருக்க வெளிச்சம்.

தவக்கனலின் அனுபவம்

223. மெய்யுணர்வாளர்களுக்கு இந்தக் கனல் மூலாதாரத்திலிருந்து உற்பத்தி. மூலாதாரம் குதத்திற்கும் குய்யத்திற்கும் இடையிலுள்ளது. அதாவது, ஆசன துவாரத்திற்கும் பீஜத்திற்கும் நடுவே உள்ளது. இதுபின்

பாகத்தில் புட்டாணி அல்லது இருப்பிட கடையாகும். இந்த இடத்திலிருந்துதான் கனல் உண்டாகிறது.

1. இத்தவக்கனல் முதல் முதலில் உண்டாகும் போது அடி வயிற்றில் நெருப்பு சுவாலையைப்போல் சுற்றி வரும். பின் நாளடைவில் தேகம் பூராவும் பரவுகிறது. அப்போது பிடரி மிகச் சூடாக இருக்கும். உணர்வு எப் போதும் மாறுமலிருக்கும்,

2. அதிக பேச்சால், பேசா மௌனத்தால், தினம் போகம் செய்தலால், அறவே போகம் இல்லாதிருத்தலால், காற்றில்லா இடங்களில் இருந்தால், வெகுகாலம் குளிக் காதிருத்தலால், க்ஷவரம் அடிக்கடி செய்து கொள்வதால் அதிக பசியாயிருத்தலால் இக்கனல் அதிகமாகும். இது எவ்வளவு அதிகமாகி விட்டாலும் உயிருக்கு ஒரு அபாயம் கிடையாது. சில நீர் சக்தி உடம்புகளுக்குச் சில சந் தர்ப்ப வித்தியாசத்தால் சிறு தொந்தரவு இருக்கலாம். அத்தொந்தரவால் சரீரத்திற்குத் தீங்காயுள்ள கெட்ட சில அணுக்கள் வெளியேறிவிடுகிறது.

இக்கனல் மிக மகத்துவம் பொருந்தியது. இது கிடைக்காமல் அநேக யோகிகள் தத்தளிக்கிறார்கள். இத னுடைய லாபம் இந்த கனல் உள்ளவர்களுக்குத் தெரிய வருமேயொழிய மற்றவர்களுக்குத் தெரியாது.

கனல் அதிகம் இருப்பதற்கு அத்தாட்சி

3. நாவு சூடாக இருக்கும். காய்ச்சல் காரர் நாவு போல் தடித்து இருக்கும். ஆனால் அவர்களுக்கு ருசி தெரி யாது. இவர்களுக்கு ருசி மிக நன்றாகத் தெரியும்.

4. தவம் பக்குவ மடைந்த போது கண்ணில் உள்ள சதை தெரியும்.

ஏகாக்கிர சக்திவாய்ந்த கண்ணாடியிட்ட கண்ணுக்குத் தடையாக இருக்கிறது.

## கனல் அதிகமாகிவிட்டால் தணிக்குமுறை

5. நல்லகாற்று உள்ள இடங்களிலிருப்பதும் செம்பு பாலை நீர் சாப்பிட்டுக்கொள்வதும், திருப்தியாய் ஆகாரம் சாப்பிட்டுக் கொள்வதும், நாவை மேல் ஒட்டாதபடி வைத்துக்கொள்வதும், கனல் தீரும்வரை தண்ணீரில் குளித்துக் கொள்வதுமாயிருந்தால், அதிக மாகாமல் நிதானமாயிருக்கும். நீர் சக்தி உடம்பினர் அதாவது தடித்த சரீர முள்ளவர்கள் 15 நாளைக்கு ஒருமுறை போகம் செய்துகொண்டால் நல்லது. மேலும் இக்கனலால் அவர்களுக்குச் சில சரீரதொந்திரவு ஏற்பட்டாலும் மனதைச் சிதரவிடாதபடி மிக சந்தோஷத்துடனும் தைரியத்துடனும் இருக்க வேண்டும். மருந்து அறவே கூடாது. சரீரத்திற்குத் தக்கவாறு குளிர்ந்த நீரிலும் ஸ்நானம் செய்யலாம். அதுவே சுகமாய் இருக்கிறது.

### உணர்வால் ஐக்கியம்

தவம்-ஆண். அறிவு-பெண்.

6. ஆதியில் தன் நிலையில் ஒன்றுயிருந்த நினைப்பே தன் ஏக்க நிலையில் பலதாய் விளைந்தது. ஏக்கம் உண்டான தன் காரணம் எல்லாவற்றையும் அறிந்து அனுபவித்து முடித்து தன் ஆதி நிலையடைவதற்காகவே. எல்லாவற்றையும் அறிய அறிவின் பிரகாச வல்லமையும், அறிந்ததை அனுபவிக்க, முடிக்க கருவின் தவ வல்லமையும் வேண்டும்.

ஒரு சிலரிடம் தவ விளைவு அதிகமாயும் ஒரு சிலரிடம் அறிவின் விளைவு அதிகமாயுமிருக்கலாம். தவம் அதிகமுடையவர்கள் தன் ஆராய்ச்சியால் அறிவின் அபிவிருத்தியும், அறிவின் பிரகாசம் அதிக முடையவர்கள் உணர்வின் அனுபவப் பெருக்கால் தவ விருத்தியும் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு செய்து உணர்வறிவின் வல்லமையால் அறிந்ததை அறிந்து, அனுபவித்து, தவக்கனலால் ஐக்கிய மடைவீர்கள்.

225. அம்மா! அம்மா என்ற இடத்தில் அன்பு என்றால். அம்மா என்ற சொல்பதிவு உன்னிடத்திலேயே.

உடலன்பு கருவால். கருவின் அன்பு உடலே.

உடலன்பு கணவன். அறிவின் அன்பே ஆசான்.

ஆசானின் அன்பே நீ. நீதானு?

என் எல்லா மெய்யுணர்வாளர்களும்.

விடிவெள்ளி முளைத்துவிட்டது. சூரியன் பிரகாசித்து விட்டது. சுயம்பு அறிந்தே விட்டாய். சுக அனுபவத்திலிருந்து வருகிறாய். சுகம் சுகந்தான். இதோ சுகம்.

கருவைக்காப்பது பெண்டிர்க் கழகு. கற்பைக் காப்பது வம்சத்தின் அழகு.

குருவைக் காத்தது என்னிருதய மலர்கள். காத்ததின் பலன் உணர்வடைந்தீர்கள்.

என் அன்பும் நினைப்பும் எல்லோர் பேரிலும் என்றென்றைக்கும் உள்ளதுவே!

## இராஜ்ய நிர்வாகம்

226. இராஜ்ய நிர்வாகப் பொறுப்பால் :

1. ஆகாரம், உடை, இடவசதி, தொழில், இவைகள் அவ்வவ் வறிவுக்குத் தக்கவாறு சரியாக இருக்கிறதா என்று வாரம் இருமுறை பார்வையிடல்.

2. குழந்தை பெறுதல் திட்டம், விவாகப் பதிவு, எம் மதஸ்தர்களா யிருந்திட்டபோதிலும் இராஜ்யத்தில் பதிவு செய்ய வைத்தல்.

3. ஒவ்வொருவருக்கு வேண்டிய அளவு அகலிக்க விடாது, அவ்வவ்வறிவுக்குத் தக்கவாறு ஆகாரம், உடை, இடவசதி, தொழில் திட்டம் வகுத்தல்.

4. பிரசாரத்தால் எக்கட்சியும் தோன்றவிடாது வைத்தல்.

5. இராஜ்ய பொது பார்வையிலேயே எல்லா பொது ஸ்தாபனங்களும் வைத்தல்.

6. தொழில், ஆராய்ச்சி, குழந்தைகளின் கல்வி இராஜ்யப் பொறுப்பா யிருத்தல்.

7. பல் விவகாரங்களாகி பிராதுக்கு வருமுன், ஆரம்பத்திலேயே பாதுகாப்பு (இராணுவ) அதிகாரி ஜாக்கிரதையாகத் தடுத்தல்,

8. ஏதொன்றும் ஒருவருக்குச் சொந்தமென்ற சொல்லில்லாது, பொது நிர்வாகத்திற்கே சொந்தமாக இருத்தல்.

9. அறிவுக்குப் பொருத்தமில்லாத எதையும் மக்கள் ஆமோதிக்க விடாது வைத்தல்.

10. மக்களிடம் பணிவாயுள்ள சொல், எழுத்துக்கள் வராது தடுத்தல்.

## அத்துவிதம்—துவிதம்

227. பல உருவங்களாய் அமைந்து வந்த ஈசனே அறிவின் மறதியால் ஈசன் வேறு ஏதோ இருப்பதாக தேடுதலில் முதல் நிலையாய் உள்ள அத்துவிதமே துவிதப்படுகிறது.

1. துவிதம்—ஈசனை நாடுதல்.

2. துவிதத்தில் துவிதங்கள்—பல சிலை, விக்ரஹங்கள், படம்; இவைகளை வணங்குதல்.

3. துவிதத்தில் துவிதம்—ஒன்றையே குறிப்பாயும், சிறப்பாயும் வணங்குதல்.

4. துவிதத்தில் அத்துவிதம்—எவ்வுருவங்களையும் வணங்காது பல ஜெபத்தால், வரம் கோருதலால் வணங்குதல்.

5. துவித அத்துவிதத்தில் துவிதம்—சமாதிகள் தெரிசிப்பது, பல பெயர்களை ஜெபிப்பது, பல உற்சவங்களை நடத்துவது. தான் ஜெபிக்கும் ஜெபம் தனக்கே அர்த்தம் தெரியாமல் ஜெபிப்பது.

6. அத்துவிதத்தில் துவிதம்—நானே எல்லாம் என்று சொல்லிக்கொண்டே அது அவர்களின் அறிவில் விளக்கமற்று இருப்பதால் எதையும் வணங்குதல், யோகம் செய்தல்.

7. அத்துவிதத்தில் அத்துவிதம்—நான் என்ற தன் தத்துவத்தை ஆராய்ச்சியின் சிந்தனையான விசாரணையுள்ளோர்.

8. அத்துவிதம்—அறிவின் அநுபோகத்தின் விளக்கத்தால் நானின்றி வேறு ஒன்று இல்லை என்ற சலனமில்லா, தன் நிலை.

## தத்துவம்

228. உடல் தத்துவங்கள் 6. அவை உடல், சூக்குமம், காரணம், சோதி, நாதம், நினைப்பு.

1. சூக்கும தத்துவங்கள் 5, அவை சூக்குமம், காரணம், சோதி, நாதம், நினைப்பு.

2. காரணத் தத்துவங்கள் 4. அவை காரணம், சோதி, நாதம், நினைப்பு.

3. சோதித் தத்துவங்கள் 3. அவை சோதி, நாதம், நினைப்பு.

4. நாதத் தத்துவங்கள் 2. அவை நாதம், நினைப்பு

5. நினைப்பு அல்லது நான் ஒரே தத்துவமுள்ளது. இதில் எல்லாமும், ஏகமும் இதுவால் ஏற்பட்டதே மேற் கூறிய தத்துவங்கள் அனைத்தும்.

6. கண், கைக்கு அகப்படுவதே ரூபம்; காது மூக அறிவுக்கு அகப்படுவது எல்லாம் அருபா ரூபம்.

## உலகில் பெரும் சிக்கலான பிரச்சனையும் அதன் முடிவும்

229. நான் என்னை மட்டும் அறியாத நிலையில் என் அறிவின் ஆற்றலின் ஆராய்ச்சியின் பெருக்கால், அநேக உண்மையான விஷயங்களைப் பல அத்தாட்சிகளுடன் கண்டுபிடித்து கிரந்தங்களாய் எழுதி நிரப்பி விட்டாலும் நானே இவை எல்லாம் எழுதியது எதுவால்? இதற்கு காரணமான கருத்தாய் நின்றது எது? என்று சிந்தித் திருப்பின், என்னை நான் அறியாத ஒரு குறைவால் அறி விற்குச் சலன மேற்பட்டு அச்சலனத்தால் முன் ஆராய்ந்து கண்ட உண்மைகள் அனைத்தையும் அழித்து எரித்துவிட்டு எல்லாவற்றையும் கடந்த சக்தி ஏதோ ஒன்று இருக்கிற தென்றும், அதைத்தான் எல்லோரும் தேடவேண்டும் என் னும் பிரசாரத்தோடு, நானும் தேட முற்பட்டுக் கொண் டும் இருந்திருப்பேன். அப்போது என்னை உலகத்தோர் எல்லாம் ஏற்றுக்கொள்வதோடு, மேற்குறிப்பிட்டபடியா யுள்ள ஆராய்ச்சியாளர்கள் அநேகரில் சிலர் அவர்கட்குக் கால சந்தர்ப்பம் கிடைக்கும்போது நான் கொண்ட கோலத்தையே ஆமோதித்து என் ஜீவிய சரித்திரத்தையே சொல்லி, எழுதிக்கொண்டு, அவர்களும் அதையே தேட முற்படுவார்கள். இன்று வரை வந்திருக்கும் யுகங்களில் நடந்திருக்கும் பெரும் சிக்கலான பிரச்சனைகள் இதைப் போன்றதே யாகும்.

1. நான் பலபாடுபட்டு என்னை அறிந்ததின் பலன் எல்லாவற்றிலுமுள்ள நிறைவையும் ஒவ்வொரு துறையி லும் எவ்வளவு தூரம் உண்மை கண்டு பிடித்திருக்கிறார் கள் என்பதையும் அறிய ஏதுவாயிற்று. பெரும் ஆராய்ச்சி யாளர்கள் எல்லாம் தன்னைத்தான் அறியாத ஒரு குறை வால் அவர்கள் கண்டுபிடித்த உண்மைகளை எல்லாம் விட்டுவிட வேண்டியதாயும் இருந்தது.

2. அச் சக்தியைக் கண்டு பிடிக்கவேண்டி பாடுபடு வோர் பக்தியின் வேகத்தால் வெகுதூரம் வரை—பூரண நிலவரை—சென்றும் தான் யார் என்பது அறியாததனால், தான் அடையாவண்ணமே பாடியும் புலம்பியும் போயிருக் கிறார்கள்.

உதாரணம்: மலையேற பாடுபட்டு ஏறியதின்பின் மலையின்மேல் உச்சியில்நின்று அதற்குமேலும் ஆராய்ந்து அங்கும் போனவனே மீறி என்று அறியாது ஒன்றும் காணவில்லையே என்று மறுபடியும் உருண்டு கீழே விழு வது போன்றதாகும். முன்நிலையில் இதில் நானும் ஒரு வன். நன்கு யோசித்தீர்களானால் உங்களின் ஞாபகமும் வந்து விடும்.

3. இவ்வகையில் பாடுபடும் பக்தியோக திடமுடை யோர்க்கு, அந்த சந்தர்ப்ப கால மனவேக பற்றுதலுக்கு இணங்கி எது எது தோன்றுகின்றதோ அவையெல்லாம் அவர்கள் சொல்லும் காலத்தில் அச்சமயத்திலுள்ள அறி வுடையோர் சிரசிக்கும்போது அறிவிற்கு முரணுயுள்ள தும் சரியில்லாததா யிருந்திட்டபோதிலும், அக்கால அறி வுடையோர் தன்னை அறியாத ஒரு குறைவால் அவற்றை யும் ஏற்றுக்கொண்டதால் பெரும் பெரும் கிரந்தங்களாக விரிந்து வந்துள்ளது.

4. என் சொந்த அநேக அனுபோகங்களையே என் நிலை அடைந்து அறிவின் அபிவிருத்திக்கு மேல், அவ்வனு

போகங்களை நான் கண்டதற்குத் தக்க காரணம் அறிந்த பின்னரனே அதைக் கண்டித்து சொல்ல வேண்டியதா யிற்று. இப்பேர்ப்பட்ட சிக்கலான பிரச்சனையில் உலகம் அகப்பட்டே வந்துள்ளது.

5. சரியான ஆராய்ச்சியுள்ளோர் தான் அறிந்த ஆராய்ச்சியையும் விருக்கிடாது அதற்கு மேலுள்ள அறி வைக் கொண்டு தன்னை அறிந்துகொள்ள முற்படவேண் டும்.

6. உடுத்திய உடையில் நெருப்புப் பற்றிக்கொண் டால் மானத்தைக் காப்பாற்றியே அணைக்கும் துரிதத் தைப்போன்று, ஒழுக்க வேகத்தால் தன்னைத்தான் அறிய முற்படுங்கள்.

7. தன்னைத்தான் அறிந்தவர்களே என்றும் குறை யில்லாதார் பிறவியில்லாதார்.

230. எதிலும் பொறுமையுள்ள வல்லவர்களே! பொறுமையின் மத்கதுவப் பொருள் நெருங்கி விட் டது வாரீர்.

ஓ பணக்காரர்களே! உங்கள் பணப் பெருக்கத் திற்கும் அறிவின் நன்ஞட்டத்திற்கும் சந்தோஷப் படுகிறேன். நீங்கள் தேடிவைத்திருக்கும் பொருளை நன்ருக அறிந்து அனுபவித்துக்கொள்ள இடமறிந்து கொள்ள வாரீர்.

பலபாடுபடும் யோகிகளே! பட்டது பலன் கிட் டியது. வந்து என் சொல்லுக்கிணங்கி அனுபவித்து ஆனந்தித்துக் கொள்ள வாரீர்.

அணுக்களின் ஆராய்ச்சியுள்ளவர்களே! அணுக் களின் இயற்கை சேர்க்கைக்கு நம் ஏக்க ஒற்றுமை

யே காரணமாகும். அணுவிலுள்ள நீங்கள், உங்களை அறிந்து கொள்ள வாரீர்.

அறிவாளிகளே! அரசர்களே! உங்கள் அம்பல சிம்மாசனத்தில் ஆட்சி புரிய வாரீர்.

உணர்வின் தவக்கனலால் நான் அடைந்து நானுகிய சந்தோஷத்தில் அழைக்கின்றேன். வாரீர் - வாரீர் - வருவீர் - வருவீர்கள் - சந்தோஷம்.

---

## பரிபூரண பரஞ்சோதியின் உயர்ஞான சபை ஸ்தாபக யாதாஸ்து.

(1860 வருஷத்து 21-வது சட்டப்படி, பதிவுற்றது.)

இந்த சபை, ஞானவள்ளல் பரஞ்சோதி மஹான் அவர்களால் ஸ்தாபிதம் செய்யப்பட்டது.

### 1. சபை நோக்கங்களும், முக்கிய நிபந்தனைகளும்

1. அறிவின் இவ்வுலகில் ஆனந்தமாய் தன்னைத்தான் அறிந்து, தான் அனுபவிக்கவேண்டியவற்றை அனுபவித்து தன் சக்தியை அபிவிருத்தி செய்து அன்றாட வாழ்க்கையில் பிரயோகித்து பேரின்பமாய் பிறவியின் பெரும் நோக்கை முடித்து, ஐக்கிய முக்தி அடைவது இச்சபையின் நோக்கம்.

2. எவ்வித புகை சம்பந்தமாயுள்ள போதைகளையும், கள், சாராயம் முதலிய லாகிரி வஸ்துக்களையும் அறவே நீக்குதல்.

3. அன்னிய ஸ்திரீகள்மேல் இச்சை கொள்ளாதிருத்தல், தன் மனைவியுடன் அன்போடிருத்தல்.

4. பிறரையோ, பிற மதங்களையோ குறை சொல்லி இகழாதிருப்பதுடன் எந்த கக்ஷிகள் சார்பிலும் கலக்காதிருத்தல்.

5. வஸ்திரங்களால் சரீரத்தை பெரும்பாலும் மறைத்திருப்பதுடன், தன் குறையை அடிக்கடி தானே உணருதல்.

6. எக்காரணத்தைக்கொண்டும் தன்னைத் தவிர்த்து வேறொன்று இருப்பதாக நினைக்கவே கூடாது.

7. தான் தவம் செய்து கொண்டு இருப்பதாக பிறர் அறியாவண்ணம் இருப்பதுடன், சாபம் கொடுப்பதோ சித்து விளையாடுவதோ கூடாது.

8. பத்து வருடத்திற்குள் ஜோதியுடன் தான் ஐக்கியமாகா திருத்தல்.

## 2. சபை நிர்வாகமும், சட்டதிட்டங்களும்

1. இந்த சபையில் அங்கத்தினராகச் சேர விரும்பும் ஒவ்வொருவரும் குருமஹான் அவர்களிடம் உபதேசம் பெற வேண்டும்.

4. இச்சபையினது கமிட்டிக் கூட்டம் ஒவ்வொரு மாதம் ஒரு தடவையோ அல்லது மேற்பட்டோ நடத்த வேண்டியது.

5. இச்சபையின் வருடாந்திர சபைக்கூட்டமானது ஒவ்வொரு வருடம் ஜனவரி மாதம் முதல் தேதிகளில் கூடி சபை அபிவிருத்திக்கான விஷயங்களைப் பற்றியும் இதர விஷயங்களைப் பற்றியும் வருஷாந்திர முடிவு, துவக்க கணக்கு திட்டங்களைப் பற்றியும் ஏகமனதாகப் பேசி, தலைவரின் அங்கீகாரத்துக்கு இணங்கி, யாவும் முடிவு செய்யப் படும்.

6. இச்சபையின் அங்கத்தினரால் கொடுக்கப்படுகிற பிரவேசக்கட்டண தொகைகளும், மாதாந்திர சந்தா தொகைகளும் சபை சம்பந்தமான கட்டிடங்களின் சம்பந்தமான செலவுக்காகவும், லைட்டு, ஸ்டேஷனரி சாமான், மேஜை, நாற்காலி வகையறு வாங்கும் செலவுகளுக்காகவும், சில்லரைச் செலவுகளுக்காகவும் இந்த தொகையிலிருந்தே செலவு செய்து வரப்படும்.

7. சபையின் தலைவர் அவர்களையும் நிர்வாக கமிட்டி அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுக்கிற காலங்களில் இச்

சபையில் ஞானவள்ளல் பரஞ்ஜோதி மஹான் அவர்களே என்றென்றைக்கும் பரமகுரு ஸ்தானத்திலும் இருந்து அமைத்து வருவார்கள்.

8. தலைவர் அவர்கள் இஷ்டப்படுகிற காலங்களில் தலைமை ஸ்தானத்தை மட்டும் தம்முடைய அபிப்பிராயப் படி யாருக்காவது கொடுக்கலாம். சபை நிபந்தனைகளை மாற்றவோ முக்கிய நிபந்தனைகளை இயற்றவோ குருபிரான் அவர்களுக்கு பூர்ண உரிமையுண்டு.

9. நிர்வாக சபைக்கூட்டம் மாதம் ஒரு தடவையோ அல்லது மேற்பட்டோ தலைவர் அபிப்பிராயத்தின்படி நடத்தி வரப்படும்.

10. தலைவர் உத்தரவின் பேரில் கூட்டம் நடத்த உப தலைவருக்கு அதிகாரம் உண்டு.

11. சபை சம்பந்தமான சகல கணக்குகளும் காரிய தரிசி அவர்களிடம் இருந்து வரவேண்டியது.

12. சபை சம்பந்தமான வசூல் செய்யப்படுகிற பணங்கள் பூராவும் திட்டமான வரவு செலவு கணக்குடன் பொக்கிஷதார் ரூ. 10—0—0 மட்டும் கையில் வைத்துக் கொள்ளலாம். அதற்கு மேற்பட்ட தொகையை தலைவ ருடைய அபிப்பிராயப்படி பாங்கில் சபையின் பேரால் தலைவர் பேருக்கு செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ள வேண்டியது.

13. பிரவேசக்கட்டணத் தொகைகளையும் மாத சந்தா தொகைகளையும் மெம்பர்களிடமிருந்து வசூல்செய்து காரிய தரிசி கையெழுத்திட்ட அச்சு ரசீது கொடுத்துவர வேண்டும்.

14. சபை சம்பந்தமாக ஏற்படுகிற சகல செலவுகளை யும் நிர்வாக சபையில் அங்கீகாரம் பெற்று செலவு செய்ய வேண்டும்.

15. காரியதரிசி அவசியம் ஏற்பட்டால் நிர்வாகசபை உத்தரவன்னியில் ரூ. 10—0—0 மட்டும் சபை சம்பந்தமான செலவு செய்து சரியான கணக்கு காண்பித்து நிர்வாக சபையில் அங்கீகாரம் பெறவேண்டும்.

16. நிர்வாக சபை கூட்டத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னும், வருடாந்திர மகாசபை கூட்டத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்னும் நோடீஸ் தயாரித்து விஷய சூசிகையுடன் தலைவர் கையெழுத்துப் பெற்று காரியதரிசி அவர்கள் சபை விளம்பரப் பலகையில் ஒட்டவேண்டும்.

17. நிர்வாக சபை மெம்பர்களில் யாராவது கூட்டத்திற்கு வர அசந்தர்ப்பம் ஏற்பட்டால் காரியதரிசியிடத்தில் எழுத்து மூலம் சந்தர்ப்பங்களை மூன்று நாட்களுக்கு முன்பே தெரியப்படுத்திக் கொள்ளவேண்டும்.

18. தொடர்ந்தாற்போல் 3 சபைக் கூட்டங்களுக்கு வராதவர்களை நிர்வாகஸ்தர் ஸ்தானத்திலிருந்து விலக்கி வேறு நிர்வாகஸ்தர்களை தேர்ந்தெடுக்கப்படும்.

19. நிர்வாக சபைக் கூட்டத்திற்கு கோரம் 5 பேருக்குக் குறையாமல் இருக்கவேண்டும்.

20. சபை சட்டப்பிரகாரம் சபை சந்தாவை உபகாரியதரிசி வசூலிக்கவேண்டியது.

21. வசூலாகும் சபை சந்தாத் தொகையைப் பொக்கிஷதாரிடம் கொடுத்து உபகாரியதரிசி ரசீது பெற்றுக் கொள்ளவேண்டும்.

22. சபையின் வருவாயினங்களுக்கும் சொத்துக்கள் முதலியனவற்றிற்கும், குருபிரான் அவர்களுக்கும் மற்ற எந்த அங்கத்தினர்களுக்கும் எவ்வித உரிமையும் கிடையாது.

23. தலைமைச்சபையின் சொத்தும், கிளைச் சபைகளின் சொத்துக்களும் அந்தந்த சபைக்கே உரியதாகும்.

கிளைச்சபையின் சொத்துக்களும் வரவு செலவுகளும் தலைமைச் சபை நிர்வாகத்தின் மேற்பார்வைக்குட்பட்டவையாகும்.

24. சபையின் பணத்தை, மாதாந்திர முக்கிய செலவினங்களுக்கும், அறிவின் அபிவிருத்திக்கும், தொழிலின் அபிவிருத்திக்கும் மட்டும் செலவழித்தல் வேண்டும். தருமத்திற்கோ, புத்தகங்கள் முதலியன வாங்குவதற்கோ வேறு எக்காரியங்களுக்கோ செலவழிக்கக்கூடாது. சென்னை கூட்டுறவு சங்க சட்டப்படி தொழிற்சாலை ஸ்தாபிக்கவேண்டும். (Draft-Model Bye-Laws)

25. மற்ற கிளைச் சபைகளின் நிர்வாகஸ்தர்கள் எலக்ஷன், சபைகள் பாஸ் செய்யும் தீர்மானங்கள் இவைகளை ஒரு வாரத்திற்குள்ளும், சபையின் வரவு செலவு கணக்கை வருஷந்தோறும் டிசம்பர் மாதம் 15-ந் தேதிக்குள் தலைமை சபைக்கு அனுப்ப வேண்டியது.

26. ஒவ்வொரு சபையிலும் வருஷாந்திர பிறந்தநின அழைப்புக் கடிதத்தை அந்தந்த சபை அங்கத்தினர்கள் யாவருக்கும் அனுப்பவேண்டியது.

27. சுவாமிகளின் ஜெனன விழா எல்லா சபைகளிலும் ஒவ்வொரு வருஷமும் மேமீ 2-ம் தேதிக்கே கொண்டாட வேண்டியது.

29. ஞான வள்ளல் பரஞ்ஜோதி மஹான் அவர்கள் முக்கிய உபதேசங்களுக்கும் ஆஸ்ரம ஆசார விதிகளுக்குமே இச்சபை ஆலயங்கள் கட்டுப்பட்டது.

30. இச்சபையில் சேர விரும்புவோர்கள் பெரும்பாலும் இல்லறவாசிகளாய் இருத்தலுடன் திடகாத்திர மேனியும், தீய வழியில் பிரவேசிக்காமலும், அன்பு, கருணை, சாந்தம், பக்தி உடையவராயும் வயது 25-க்கு மேல் 70 வயது வரை சீரத்திங்கு இல்லாதவராயும் இருந்தால் சபையில் சேர்த்துக்கொள்ளப்படும்.

31. குருபிரான் கொடுத்த உபதேச மார்க்கத்தில் 10 மாத கால பரியந்தம் சரிவர அனுஷ்டானத்தில் இருந்து பழகுவோர்கள் முற்பிறவியில் எடுத்துவந்த பிறவிக்கடனை ஒழிப்பதுடன் மறு பிறவி இல்லை என்பதே நிச்சயம், இந்தப் பிறவிக்கடனை முடிக்கிற வரை மரணமே கிடையாது.

32. 10 வருடகாலம் அனுபவங்களுக்கு மேல் மனச் சந்தோஷமாக இப்பிறவியின் முடிவு தெரிந்துகொண்டு தன்னுடைய சொந்த அணுக்களை ஏவி விட்டு விட்டு, ஜோதியுடன் ஐக்கியமாகிக் கொள்ளலாம்.

## பெண்களுக்கு.

33. புருஷனின் அனுபவத்திற்கும், பெண்ணின் பக்குவத்திற்குமேல் உபதேசம் கொடுக்கக்கூடும்.

குறிப்பு :—1. புருஷனின் பக்குவம் ; சபையின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்ட நடத்தையுள்ளவராயும், தவத்தில் அனுபவஸ்தராயும் இருத்தல் வேண்டும்.

2. பெண்களின் பக்குவம்:—35 வயதிற்கு மேலும், புருஷ குடும்ப வழிபாட்டில் நின்றவராயும், ஞானம் அடைய அவாவுடையவராயும், சபையின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டவராயும், உபதேசம் அடையும் போது கர்ப்பம் இல்லாதவராயும் இருக்கவேண்டும். குழந்தை பெற்றிருந்தால் பிரசவமாகி 1 வருஷம் கழிந்தவர்களாக இருக்கவேண்டும். அமங்கலிகளாயின் 40 வயதிற்கு மேலும் அமங்கலியாகி 1 வருஷ காலத்திற்குமேலும் இருக்கவேண்டும். சபை அங்கத்தினரின் ஆதரவுக்குட்பட்டவராயும் இருக்கவேண்டும். எல்லாப் பெண்களுக்கும் சபையிலேயே உபதேசம் கொடுக்கப்படும். பிரவேசக் கட்டணம் ரூ 12—5—3ஐ உபதேசம் பெறும். 2 நாட்களுக்கு முன்னமேயே கட்டி ரசீது பெற்றுக்கொள்ள வேண்டும் உபதேசம் பெறும் காலங்களில் தவிர மற்ற

காலங்களில் எக்காரணத்தை முன்னிட்டும் பெண் சிஷ்யர் யர்கள் சபைக்கு வரக்கூடாது.

**34.** பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை யென்று இந்த சாஸனத்தில் கண்ட முக்கிய அம்சத்தை யாவதும், மேல்படி விலாசத்தையாவதும், இங்குள்ள நூல் களையாவதும் மற்ற அம்சங்களையாவதும் உள்ளபடியோ அல்லது மாற்றியோ அமைத்துக்கொள்ள யாருக்கும் கவர்ன்மெண்ட் சட்டப்படி அதிகாரம் இல்லையென்ப துடன் மீறிச் செய்கிறவர்களையும் வெளியில் துர்ப்பிர சாரம் செய்கிறவர்களையும் சட்ட விரோதமான குற்ற மென்றும், நாம் கோறிய நஷ்டத்திற்கு அவர்கள் பாத்தியப் பட்டவர்கள் என்றும் இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது.

இச் சபையின் அங்கத்தினர்கள் யாவரும் பொது சபைக் கூட்டத்தில் ஏக மனதாக நிறைவேறிய தீர்மானப் படியும் இந்த ஸ்தாபக யாதாஸ்துக்கு இணங்கவும், இந்த சபையை 1860ம் வருடத்து கவர்ன்மெண்டு 21-வது ஆக்ட் டுப்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்டுள்ளது.




Printed at the Rajan' Electric Press, Madras.
For Q. H. M. S. P. P. No. 41-46—8/46

பரஞ்ஜோதி மஹான் அருளிய
"எந்நூலுக்கும் இந்நூலே மூலம் என்ற
உயர்ஞான நூல்கள்

---

1. ஆதியும் உலக இணைப்பும்
2. உணர்வும் தவக்கனலும்
3. ஒருமொழி.
4. பரஞ்சோதி
5. பேரறிவு
6. ஆருதாரமும் அமிர்தமும்
7. ஞானக்கண்
8. பூகலோகம்

அச்சில்:—

9. நடந்ததெல்லாம் நன்மைக்கே
10. சந்தோஷம்

# நம் சபை புத்தகங்கள் கிடைக்குமிடம்

---

## பரிபூரண பரஞ்சோதியின் உயர் ஞான சபை

1. 1. மேல வடம் போக்கித் தெரு மதுரை.
2. 330, திருவொற்றியூர் பெரியசாலை தண்டையார் பேட்டை, சென்னை.
3. ௸ சபை, பெரம்பூர்.
4. நெ, 30. நம்மாழ்வார் செட்டித் தெரு, குனை.
5. ஜலானா பவான் மட்டுங்கா, பாம்பே 19.
6. கீழரத வீதி, சொக்கலிங்கபுரம், அருப்புக்கோட்டை.
7. ௸ சபை, வெள்ளக்கோட்டை, அருப்புக்கோட்டை.
8. சின்னாளப்பட்டி, மேட்டுப்பட்டி.
9. பெரியகுளம், தெங்கரை.
10. புதுச்சேரி 99, பசீலு தெரு.
11. வேலூர் N. A. வேப்பமரத் [illegible]பா.
12. காஞ்சீபுரம். 120. புத்தேரித் தெரு.
13. காக்கினாடா. (ஜெகன்னாதபுரம்)
14. பரிபூரண பரஞ்சோதி கம்பெனி 34, கார்ப்பரேஷன் புரூட் மார்க்கெட், சைனாபஜார் ரோட், மதராஸ்.
15. விழுப்புரம், கீழ்வன்னித் தெரு மருதூர்.
16. சேலம், அருணாசல ஆசாரி தெரு.
17. பாளையங்கோட்டை, நெசவாளர் கூட்டுறவு சங்கம்.
18. திருவண்ணாமலை, லக்ஷ்மி நாராயணன் புகையிலை மண்டி.
19. பெங்களூர், ௸ 91. மெயின் ரோட், காட்டன் பேட்.
20. திருவாரூர்.
21. Higginbatham's Book Stalls